REGISTERED—No. M. 108.

"His Royal Highness desires me to express to Mr. Swaminatha Aiyar his best thanks"—Sir Francis (now Lord) Knollys.

Vol. XVIII.] OCTOBER 1910. [No. 7.

லேசான காகிதப் பதிப்பு.
தனிப்பிரதி, 5 அணா.
பழைய பிரதி, 6 அணா.

சந்தா விலை விபரம்.
ஒரு வருஷத்திற்கு ரூ. 4.
ஆறுமாதத்திற்கு ,, 2-2.




**DEVOTED TO PRACTICAL TRUTH AND KNOWLEDGE.**

அறிவுடையாரெல்லாமுடையாரறிவிலா
ரென்னுடைய ரேனுமிலர்.-திருக்குறள்.

A POPULAR NEW REVIEW AND TAMIL MONTHLY, ESTD. MAY, 1892.

கற்க கசடறக் கற்பவை கற்றபி
னிற்க வதற்குத் தக.—திருக்குறள்

ILLUSTRATING THE PRINCIPLES OF EDUCATION, PSYCHOLOGY, SOUL-CULTURE & ETHICS.

**ADAPTED FOR USE IN HOMES & SCHOOLS.**

["Hitch Your Wagon to a Star"—Emerson.]

CONTENTS. PAGE.



அட்டவணை. பக்கம்.



["Our Theism is the Purification of the Human Mind"—Emerson.]

Thick Paper Edition for Patrons.] PUBLISHED BY [Minimum Subscription Rs. 5.

**THE SECRETARY, DIFFUSION OF KNOWLEDGE AGENCY,**

Overland 8 Annas extra.] *Lalitalaya, Mylapore, Madras, S.* [Overland 8 Annas extra.

**For the Viveka Chintamani Publishing Committee.**

Thin Paper Edition for the people.] (*Copyright Registered*) [Subscription Price: Yearly Rs. 4.

*Like a spider, like the earth, and like a living creature He produces the Universe."—Sruti.*

# THE VIVEKA CHINTAMANI.

ESTABLISHED 1892.

The Oldest and the Best Tamil Monthly: Yearly Rs. 4.

Thick Paper Edition Rs. 5. in Advance.

Subscriptions registered by Volume only and cannot be discontinued in the middle of a Volume.

**EDITOR** LALITALAYA, MYLAPORE.

**C. V. Swaminatha Aiyar.** *Madras, S. Septr. 1910.*


## விவேகசிந்தாமணி.

வருஷசந்தா ரூ. 4, வாலியம் கணக்காகவே சந்தா பதிவுசெய்யப்படும்.

### விவேகசிந்தாமணிக் கமிட்டி விண்ணப்பம்.

ஆரிய சகோதரர்களே! விவேகசிந்தாமணி, இப்பொழுது மாதந்தோறும் ஒழுங்காக வெளியாகி வருகிறது. ஸாதாரண வருஷ முதல் மிகவும் அருமையான விஷயங்களெல்லாம் வெளியாகிவருகின்றன. ஸித்தர்கள் ஸாதநமுறை, யோகம், பக்தி, ஞானம் முதலான ஸாதந முறைகள் உபநிஷத் வாக்கியார்த்தம் இவை வெளியாகிவருகின்றன. விவேகசிந்தாமணியென்ற பெயர்க்கேற்றபடி இதில் விவேகத்தை விளைவிக்கக்கூடிய அற்புத விஷயங்கள் நிறைந்திருக்கும். இக்காலத்துக்கேற்றபடி தேசாபிமானம், பாஷாஞானம், நீதி போதம், வேதாந்த சாரம், சுதேச விதேச சரித்திரங்கள், மஹாத்மாக்களின் அமிருத வசனங்கள் பகவான் அர்ச்சுனனுக்குப் போதித்த நித்தியானுகூல ஸாதனங்கள், அப்போதைப்போது நடக்கும் விசேஷ ஸம்பவங்கள், ஆகிய இவைகள் அடங்கப்பெற்றுச் செந்தமிழ் நடையில் எழுதப்பட்டுத் தமிழ்நாடெல்லாம் ஜ்வலித்துவருகிறது. இம்மாசாந்தப் பத்திரிகைக்கு ஒவ்வொருவரும் சந்தாதாரராகச்சேர்வதுடன் தங்கள் நேசர்களுக்கும் காட்டி அவர்களையும் வாங்கும்படி செய்து ஆதரித்துவரக்கோருகிறோம். மனிதர்களுக்கு உய்யும்வழிகாட்டி அவர்களைக் கடைத்தேறச் செய்யும் உண்மையான ஸத்குருவைப்போல விவேகசிந்தாமணியை வாசிப்பவர்களுக்கு அது உற்றவிடத்துதவியாய் நின்று விவேகத்தை வளர்க்கும் குருவாய்த்தோற்றுமென்பதிற் சிறிதும் சந்தேகமில்லை. பத்திரிகையை முழுதும் படித்துக் கையொப்பக் காரர்களாய்ச் சேரவும், இதரர்களையும் அப்படியே சேரும்படி செய்யவும் கேட்டுக்கொள்கிறோம். இப்பத்திரிகையை வாங்கி வாசிப்போர் இகபர சாதனங்களிரண்டிலுந் தேறிப் பெறு வாழ்வெய்துவர். சன்மார்க்க சாதனமான பத்திரிகையென்றும் விவேக விருத்திக்கின்றியமையாததென்றும் அநேகர் அதை ஆதரித்துக் கொண்டாடிவருகிறார்கள். பத்திராசிரியருக்கும் பத்திரிகைக்கும் அர்பத்நட் கம்பெனி முழுகிப்போனதில் நேர்ந்த பெரு நஷ்டத்தால் செலவுக்குவேண்டிய அளவே காபிகளச்சிடப்படுவதால் வேண்டுவோர் உடனே யெழுதிப் பெற்றுக்கொள்ளவேண்டும்.

1910ஹு ஏப்ரல் - மே முதல் 18-வது வால்யம் ஆரம்பம்.

**சி. வி. ஸ்வாமிநா தய்யர்.** **எம். கே. நாராயணஸ்வாமி ஐயர், பி-ஏ., பி-எல்.**

**பத்திராசிரியர்.** **விவேகசிந்தாமணிக்கமிட்டி காரியதரிசி.**

ஐயா,

## ORDER FORM.

Please enrol me as a Subscriber and send the Vivekachintamani by V. P. P. for a year's subscription, viz, Rs. 4-1-0.

ஐயா, விவேகசிந்தாமணிக்கு என்னையும் ஒரு சந்தாதாரராகச் சேர்த்துக்கொண்டு முதல் சஞ்சிகையை ஒரு வருஷ சந்தா ரூபா 4-1-க்கு V. P. P. மூலமாக அனுப்பக் கோருகிறேன். தவறாமல் தபாலாபீஸில் பணம் கட்டிப் பெற்றுக்கொள்கிறேன்.

பேர், தொழில், ஊர் விலாசம், போஸ்ட் இவைகளை கண்டெழுதவும்.

☞ தனிப்பிரதி ஒற்றைச்சஞ்சிகையானால் அணா $5\frac{1}{2}$, இரட்டை சஞ்சிகையானால் அணா 10 அனுப்பவும்.

*"Give me not O God, that blind, fool faith in my friend, that sees no evil where evil is, but give me, O God, that sublime belief, that seeing evil I yet have faith."*

*"Seek Truth wherever you can find it." But,*

*"Make your choice and stick to it till you reach the End."*

ஸத்தியம் வத—**SPEAK THE TRUTH.**

"HITCH YOUR WAGON TO A STAR." "TO THINE OWN SELF BE TRUE."




அன்பேயவன்: அறிவேசக்தி: ஓம் தத்ஸத்.] [God is Love: Knowledge is Power: *Aum*

ஸத்யமே ஜெயம்—**SATYAMEVA JAYATI.**

புத்தகம். 18.] 1910ஹூ அக்டோபர்மீ, சாதாரணஹூ அர்ப்பிசிமீ [சஞ்சிகை. 7.

# * TIRUKKURAL=THE ESSENCE OF TRUTH.

## 2. *The Ministry of "Heaven"=Rain.*

"**Kundalini** when roused from slumber by excessive heat, is thirsty and hisses round in search of **Amrit** (nectar) to quench its thirst."

"Wet the whole (body) and further wet. Know me always as born from the one."——(Taitr-Ar. 1).

"May Kundalini whose movements are secret and who by the blaze of the fire, by the illumination of the sun and by the brightness of the moon causes the ambrosia to flow through the seventy-two thousand (nerve) channels, make us contended."—**Sukasamhita.**

"The Universal Soul is the alone creator of the useful and the beautiful ...... the omnipotent agent is Nature".—— Emerson on Art.

"Nature in its ministry to man, is not only the material, but is also the process and the result. All the parts incessantly work into each other's hands for the profit of man. The wind sows the seed; the sun evaporates the sea; the Ice on the other side of the planet condenses rain on this: the rain feeds the plant: the plants feed the animal, and thus the endless circulation of the divine charity nourish man"—Essay **on Nature**, by **Emerson.**

# திருக்குறளியல்.

## 2. வான்சிறப்பு.

“அந்நாத்பவந்திபூதாநிபர்ஜந்யாதந்நஸம்பவஃ
யக்ஞாத்பவதிபர்ஜந்யோயக்ஞஃகர்மஸமுத்பவஃ.”

பகவத்கீதை—III-14.

[“பிராணிகள் அன்னத்தினாலேயே பிறக்கிறார்கள். அன்னம் வருணதேவனாலாக்கப்படுகிறது. வருணதேவன் யஜ்ஞத்தாற் பிறக்கிறான். யஜ்ஞம்சருமத்தாலுண்டாகிறது.”]

“பார்வை யிரண்டுண்டு ; பகிர்-அகமுகமென்பார் ;
பார்வை பகிர்முகம் பரந்தவுல காராய்ந்தால் ;
பார்வை யகமுக முள்ளுணர்வை யோர்ந்துணரில் ;
பார்வை யிரண்டு மொன்றாவதுணரார் பரதவித்துழல்வாரே.”

—அகண்டானந்தம்.

“இமம்மேவருண ச்ருதீஹவமத்யாச்ச ம்ருடயத்வாமவஸ்யுராச்சகே”....—சாயங்கால ஸந்தியாவந்தன சூரியோபஸ்தாநமந்திரம். (ருக்வேதவாக்கியம்.)

[வருணசப்தம் பரமாத்மாவைக் குறிக்கிறது: எப்படியெனில் “வருண ஏவ வருணஃ”= “சேதநாசேதநாத்மகமான எல்லா வஸ்துக்களுக்கும் ஆவரணம்” ஆகநிற்பது வருணன்.]

“ஓ வருணா இன்றையதினம் நீ என்னுடைய பிரார்த்தனையைக்கேட்டு என்னை மனங்குளிரச்செய்வாய். உன்னுடைய கடாட்சத்தை இச்சித்து நான் உன்னை வேண்டுகிறேன்.”—என்பது பொருள்.

“மேற்கொண்ட என்றன் தாபமது தீர்ப்பான்
வேற்போலுங் கண்ணாள் ஸ்ரீவித்தை யென்தேவி
மேற்போன உன்றனுக்கென் ஸ்வரூப மீதுணரென்று
வேற்போலும் வானத்தைக் கிழித்தொளியா நின்றாள்பார்.”

—பஞ்சதசாக்ஷரீஸ்தவம்.

“மின்னுக்கெல்லாம் பின்னுக்குமழை.”—ஔவையார்.

வான்சிறப்பு (அதிகாரமுறை.)


டவுள் வாழ்த்துக்" கூறிய வள்ளுவனூர்பின், "முதலெழுத்தோதிய நூலின் பய"னைப் உள்ள "ஆதியாய்நின்றஅறிவு," "வான்" வழி தோன்றும் சிறப்பை யெடுத்துரைக்கிறூர். வான் என்பது வானத்திலிருந் துண்டாகும் மழைக்குச் சிறப்புப் பெயராகநின்றது. "வேற்போலும் வானத்தைக் கிழித்தொளியாய் நின்ற" குண்டலினியாகிய சிற்சக்தி அகக்கண்ணுக்கு அருள்வடிவாயும் அதுவே பின்னர் தெருள் (தெளிவு) வடிவாயும் முகக்கண்ணுக்கு மின்னல் வடிவாயும், "மின்னுக்கெல்லாம் பின்னுக்கு மழை" யாதலால் அதுவே பின்னர் மழைவடிவாகவும் தோன்றி விளங்கும். அகமுகத்தில் (அகத்தில்) அருளும் தெருளுமாயும் பஹிர்முகத்தில் (புறத்தில்) மின்னலும் மழையுமாயும் உருக்கொண்டு விளங்கும் வான்சிறப்பை, அது கடவுளின் மஹிமையாதலால், கடவுள் வாழ்த்துக்குப்பின் அதைப்பரவியல் பற்றியும் உலகியல் பற்றியும் காரண—காரிய தோரணைமுறையாலே இரண்டாவதாக வைத்துச் சொல்லத் தொடங்குகிறூர்.

* * *

"அஹம்-புறம்."

ஒளவையாரும் "ஆதியாய் நின்ற அறிவு" விளங்கக் கூறியபின், பிறப்பியல் கூறுவான்—

"பரமாய சத்தியுட் பஞ்சமா பூதந்
தரமாறிற் றேன்றும் பிறப்பு."—

எனக்கூறியிருக்கிறூர். பரமாய சக்தியுள்ள இடம் "பராகாசம்" என்னப்படும். அந்தப் பராகாசத்திலிருந்து பொழிவது "அமிர்தவருஷம்" என்னும் மழை. அந்த "அமிர்த" மழையானது, அக்னிமண்டலத்தின் ஜ்வாலாகாரத்தாலும், சூரியமண்டலத்தின் பிரகாச வெப்பத்தாலும், சந்திரமண்டலத்தின் தண்ணொளியாலும் இயக்கப்பட்ட "குண்டலினி சக்தியின்" நடையால், ஸஹஸ்ரதளமென்று உபசாரமாய்ச் சொல்லப்பட்ட பராகாசத்தின் கண்ணுள்ள "அமிர்தம்" மழையாகப் பொழிந்து எழுபத்தியீராயிரம் நாடிகளையும் நனைத்து உயிர்க்காதாரமாய் நின்று உள்ளத்துவகையால் திருப்தியையுண்டுபண்ணுகிறது. இது அகமுகத்தேகண்டனுபவிக்கத் தக்கதோர் காட்சி, அஃதேபோல, பஹிர்முகத்தும் உலகியல் நடையில்,—

"வானின் றுலகம் வழங்கி வருதலாற்
றானமிழ்த மென்றுணரற் பாற்று."

["வானமிழ்தமான" மழை இடையறாது நிற்ப, (அகமுகத்தே உயிர்க்கிருப்பிடமான 72,000 நாடிகளைப்போல் பஹிர்முகத்தே உயிர்களுக் கெல்லாமிருப்பிடமான) உலகம் (பிறப்பிடையறாமையின் எஞ்ஞான்றும் உடம்பொடு காணப்பட்டு வருதலாகிய நித்திய) நிலைபெற்று வருதலான், (அது) உலகத்துக்கு அமிழ்தமென்று உணரும் பான்மையை உடைத்து.]

பராகாசத்திலிருந்து குண்டலினி சக்தியின் ஏபக்கத்தால் நாதபிந்து ரூபமாய்த் தோன்றி அமிர்த வருஷம் பொழியும் ரஸதன்மாத்திரையான ஆப்தத்துவம் 72,000 நாடிகளையும் நனைத்து உயிருடலுறவை உறுதி செய்வதுபோல, மஹாகாசத்திலிருந்து மஹாமாயையின் சலனத்தால், மின்னலிடி ரூபமாய்த்தோன்றி மழையாக வருஷிக்கும் ஆப்தத்துவ மஹாபூதமான (ஜல) மழை உயிருலகுறவை உறுதிசெய்து பிரபஞ்சதர்மம் இடையறாது நடக்கச் செய்கிறதாகையால், அது "அமிழ்தமென் றுணரற்பாற்று" என்றூர்.

இது அகம்புறமிரண்டுமோக்க வுரைத்ததோர் உண்மை யென்றினிச் சொல்லாமேயமையும். உண்மையென்றூல் "தத்துவம்"—யாதாத்மிய சம்பந்தத்தால் தத்பத, துவம்பத மிரண்டுமொன்றதாம்.

"தத்து வமெங்குண்டு தத்துவனங்குண்டு" என்னும் திருமந்திரோபதேசப்படி தத்துவனைக்

காட்டியபின் எல்லாவற்றிற்கும் மேலான தத்துவத்தை யெடுத்துரைக்கிருர்.

அநித்தியமான தத்துவங்கள் "பூதமுதலாகவே நாதபரியந்தமும் பொய்"யென்று கூறியிருத்தலாலே விளங்கும். நாதம்வரையில் அபாததத்துவங்களாம். நாதத்துக்குமேலுள்ள நாதாந்தம் பாதத்துவமாம். அது "நாதாந்த வெட்டவெளி" யென்றதனுல், பரவெளி யென்றும் பராகாச மென்றும் பெறற்படும். இந்த 'நாதாந்தரூப'மே 'வேதாந்தமோன'மும் ஆம். அங்கே "நானெனுமகந்தை" தீர்ந்துபோக, தற்போதமாம் "என்மதி" ப்ரபோதசந்திரோதயமான "மஹத்" என்னும் "ப்ரபுத்தி"யில் ஓடுங்கிநிற்கும். ஆதலால்தான் அதை "நானெனுமகந்தை தீர்த்தென் மதியுண்டமதியான மதிவதனவல்லியே!" என்று அருவிலுருவாய்க் கண்டு தொழுதுள்ளார் மேலோர்.

நாதாந்தத்திலிருந்து "நாதம்" பிறந்ததாகவே, "நாதவடிவாகிய மஹாமந்திராதிரூபியே" யென்றுகூறிய "மனோன்மனி"க்கும் மேலாயுள்ள அவஸ்தாதீதமான "மௌனமந்திராதிக்யவித்யை"யே "பாராகாசம்" என்று சொல்லும் 'நாதாந்த வெட்டவெளி.' இந்த நாதாந்தவெட்டவெளியில் "சிவ-சக்தியைக்கியம்" நேரிடும்பொழுது அமிர்தவருஷம் பொழியும். தத்துவதரிசனமாய் அபாதத்துவங்களெல்லாம் "பொய்", அதாவது, நிலையற்றன வென்று கண்டுதள்ளின யோகதற்பரனுக்கே, பராகாச வெளியிற்புகும் சக்தியுண்டு. அங்கேபோனவனுக்குப் பராசக்தி மின்னல்போல் "அருள்வடிவாய்த்"தோன்றி மறைந்து "மழைவடிவாய்" அருள்பொழிவள். அதுவே "வான்" சப்தத்தின் பரார்த்தம். அபாத்தில் அதுமஹாகாசத்தினின்று மின்னலிடியதுவாய்த் தோன்றித்தண்மழையதுவாய்ப்பொழியும். ஆகையால்தான், பரையோகத்தில் யோகதற்பரனை யோகாநந்தனுக்கு "ஆதியாய் நின்றஅறிவு' வடிவான பரதேவி, பாவித்யைரூபமாய்,—

"மேற்போன உன்றனக்கென் ஸ்வரூப மீதுணரென்று
வேற்போலும் வானத்தைக் கிழித்தொளியாய் நின்ருள்பார்"

என்று காட்டியது. "வேல்" எதையும் ஊடுருவிச்செல்லும் சக்திவாய்ந்தது. அது சக்திரூபமாயிருத்தலால் அதற்கு "சக்தியாயுதம்" என்று பேர். "வேற்போலும் வானம்" என்றதனுல் எல்லாவற்றையும் ஊடுருவிச் செல்லத் தக்க ஸர்வவியாபகசக்திவாய்ந்த "பாராகாசம்" குறிக்கப்பட்டது. அந்த வானைக் கிழித்தலாவது அதன் வியாபகசக்தியாகிய ரஸத்தைப்பொழியச்செய்வதாம். அதுதான் "அமிருதவருஷம்" என்பது.

பராகாசத்தின் ஸர்வவியாபக சக்தியை ரஸமாகப் பிழிந்தெடுத்தால், எல்லாவஸ்துக்களிலும் அந்தர்யாமியாய் நிற்கும் நிலை சித்திக்கும். இதுவே அமிர்த சித்தியாம். இதனுல் "மிருத்யுநாசம்" தானேலபிக்கிறது. "மிருத்யுநாச முண்டானுல்" உயிருடலுறவு இடையருது நிலைபெற்றிருக்கச் சித்திக்கிறது. இந்த சித்தியே நித்தியத்துவம். அபாத்தில் இது ஈசத்துவமாம்.

* * *

அதன் சாதகமுறைத்தல்.

இப்படியாக உயிருடலுறவை யுறுதிப்படுத்தலால் "அமிழ்தமென் றுணரற்பாற்றதான" மழை, எப்படிப்பட்டது எனில்,—

(2) "துப்பார்க்குத் துப்பாய துப்பாகித்துப்பார்க்குத்
துப்பாய தூஉ மழை."

[உண்பார்க்கு நல்ல உணவுகளை உளவாக்கி (உண்டாக்கி), அவைகளை யுண்பார்க்குத் தானும் உணவாய் நிற்பதூஉம்மழை —பரிமேலழகருரை.]

இந்த மழையானது தாஹதாப மிரண்டையுந்தீர்க்க வல்லதாயிருக்கிறது. தாஹம் (நீர்வேட்கை), தாபம் (பசிவேட்கை),—இவ்விரண்டையும் தீர்ப்பதும் மழையேயாம். உயிருடலுறவை நிலைநிறுத்துவது பசிதாஹங்களைத் தீர்த்தலாலன்றி கூடாதாதலின் காரணகாரிய தோரணையாலே, உயிருடலுறவு நிலைநின்ற

போது பசிதாஹம் என்னும் ஈரவஸ்தைகளும் தீர்க்கப்பட்டதாக வேணுமாதலால், அதற்குக் காரணம் வேறுளதென்றெண்ணுவதற் கிடமின்றி உயிருடனுறவின் நிலைப்பேற்றுங்குக் காரணமாய் நின்றமழையே அந்த நிலைப்பேற்றின் காரியமான பசி, தாஹம் இரண்டையும் போக்குவதா யிருக்கிறது என்று பின்னுமதன் சிறப்பை யெடுத்துக் கூறினர்.

அருள்வழிப் பட்டார்க்குப் பிறப்பிறப்பென்னும் பேதைமை யொழிந்துபோதலாலே, அந்த அருண்மழையினாலே "உயிருடனுறவு" என்று சொல்லும் அத்துவிதநிலை சித்திக்கும். சாசுவதமான அந்தநிலை சித்திக்கக் காரணமாயிருக்கும் அருண்மழைதானே போகபோக்கியங்களாகிய நல்ல உணவுகளை யுண்டுபண்ணி, கிருதகிருத்தியப்ராப்தி யென்னும் நைஷ்கர்ம சித்தியால் காரணகாரிய தோரணையறிதலாகிய ஆத்மதாஹத்தையும் தணிக்கும்.

* * *

சாதகங்கூறிப் பாதகமுரைத்தல்.

மழையினாலுண்டாகும் சாதகங்கூறி அதன் சிறப்பை வற்புறுத்துவான் அது இல்லாமையினாலுண்டாகும் பாதகத்தை அடுத்தபாட்டில் கூறுகிறார்.

(3) "விண்ணின்று பொய்ப்பின் விரிநீர் வியனுலகத்
துண்ணின் றுடற்றும் பசி."

[மழை வேண்டுங்காலத்துப் பெய்யாது பொய்க்குமாயின் கடலாற் சூழப்பட்ட அகன்ற உலகத்தின் நிலைபெற்று உயிர்களை வருத்தும் பசி.—பரிமேலழகருரை.]

"Wet the whole (body) and further wet. Know me always as born from the One." என்று தைத்ரேய ஆரண்யகத்தில் சுருதி முறையிட்டிருக்கிறது. அருள் மழை பெய்து தாபத்திரயங்களாலும் எரிக்கப்பட்டுக் காய்ந்துபோன (உயிர்நிலைக்கிடமான) நாடிகளையெல்லாம் நனைத்துக்கொண்டே வராவிடில் ஸமுத்திரத்திலுள்ள வடவாமுகாக்நி போலுமுள்ள உதராக்கினி நிறைந்த ரக்தநாடிகளால் சூழப்பட்ட பிண்டத்தினுள்ளே (தாபத்திரியங்களான) பசி நிலையாகநின்று ஜீவனைவருத்தும். உதிரம்ஜலரூபமேயாயினும், கடல்நீரைப்போல் பயன்படாதொழியும். கடல்நீரானது எப்படி அதிலுள்ள வடவாமுகாக்நியினாலும், சூரியப் பிரகாசத்தின் வெப்பத்தாலும், சந்திரனின் தண்ணொளியினாலும், மேகங்களால் ஆகர்ஷிக்கப்பட்டு, மின்னலிடியோடுகூட மழையாகப் பொழிந்தால் மட்டுமே, உணவுகளை யுண்டுபண்ணித் தானுமுணவாதல்போல, உதரத்திலுள்ள குண்டலிநிசக்தியானது மூலாக்நியின் ஜ்வாலாகாரமான உதிராக்நியாலும், மணிபூரக, அநாகத, விசுத்தி ஸ்தானங்களிலுள்ள சூரியமண்டலத்தின் கேவலகும்பகப் பிரகாச வெப்பத்தாலும் ஆஜ்ஞைக்குமேல் ஸஹஸ்ரகமலம் வரையிலுள்ள சந்திரமண்டலத்தின் தண்ணொளியாலும் ஆகர்ஷிக்கப்பட்டு ஆவிரூபமாயெழும்பி ஸஹஸ்ராரத்திலுள்ள பராகாசவெளியில் மின்னலிடி ரூபமாகத்தோன்றி (பிந்து நாத தத்துவங்களின் ஊர்த்துவமுக சேர்க்கையால்) "அமிர்தவருஷிணி" யென்னும் அருள்மழை பொழிந்தாலன்றி ஜீவாத்மாவுக்கியல்பாயுள்ள தாபத்திரியம் நீங்காதாகி, அதினுண்ணின்று வளர்ந்து அறிவைமயக்கி ஆத்மாவைவருத்தும்.

ஆகையால் சமுத்திர ஜலமானது எப்படி லயப்பட்டு மேகங்களாகிப் பின்னர் மழையாகப் பொழிந்து உலகை (உயிர்களை)க்காக்கின்றதோ, அப்படிப்போல, உதிரத்திலுள்ள ஜலமானது லயயோகத்தாலே கருணைமுகிலாகமாறிப் பின்னர் † அருள்மழைபொழிந்தாலன்றி ஆத்மாவைப்பற்றிய தாபத்திரயங்களும் அவற்றாலுண்டாகும் "பசியும்" நீங்காது நிலைபெற்று அறிவை மயக்கி வருத்தும்.

† Compare: "செம்பிற்களிம்புபோல செங்குருதி தன்னில்தாயே" "அம்பரத்தாடுமீசன் அருளொன்னுங் களிம் பொன்றுண்டு".

"வசியமானல் கட்டழகி பசியுங்காணு தசியுமாவாய்
நசியா திவ்வுடலங்காண் நாதபிச்து சேர்ந்தால்
பசியாதென்ற சொன்னதுவும் பரமசவியம்
நசியாத இவ்வுடலைநீ நயர்து பாரே!"
—சித்தவாக்கு.

"பசி நிலைநின்று வருத்தும்" என்னவே, பசி நிலைநிற்பதற்கான காரணம் கூறவேண்டி மழையின்மை உணவின்மையாவதையுணர்த்த அடுத்தபாட்டில் மழையின்மையால் வரும்பயனைக் காரண-காரிய தோரணையினுனே யுணர்த்துகிருர்:—

(4) "ஏரி னுழாஅ ருழவர் புயலென்னும்
வாரி வளங்குன்றிக் கால்."

[உழவர் ஏரானுமுழுதலையுஞ் செய்யார், மழையென்னும் வருவாய் தன்பயன் குன்றின்.—பரிமேலழகருரை.]

உழவர் ஏருழுவதுஞ் செய்யாராக விளைவு குன்றி உணவிலையாகு மென்ருர். அதைக் கேட்டு மழையின்மையின் கொடுமையைக்கண்டு ஒருதலைச் சார்பான எண்ணங் கொள்ளாதபடி மழையின் ஆற்றல் முற்றும் முறையே கூறுவான், அடுத்தபாட்டில்,—

5. "கெடுப்பதூஉங் கெட்டார்க்குச் சார்வாய்மற்ருங்கே
யெடுப்பதூஉ மெல்லா மழை." [மற்ருங்கே
—என்ருர்.

[பூமியின்கண் வாழ்வாரைப் பெய்யாது நின்று கெடுப்பதூஉம், அவ்வாறு கெட்டார்க்குத்துணையாய்ப் பெய்து முன்கெடுத்தாற்போல் எடுப்பதூஉம் இவையெல்லாம் வல்லது மழை.—பரிமேலழகருரை.]

"அடிக்குமோருகை அணைக்குமோருகை" யென்றவாறு "கெடுப்பதூஉம், எடுப்பதூஉம்" வல்லது மழை. அருள்வழிப்பட்டார்க் கிதனுண்மை விகசிதமாம்.

"அருளினலன்றி யாவதொன் றில்லையால்
மருளினல் நானெனச் செய்வதொன் றில்லை
தெருளினு லுள்ளந் தெளிந்திடச் செய்யுமுன்
னருளினலன்றி யாவதொன் றில்லையே!"

"கெடுப்பதூஉம், எடுப்பதூஉம்" அருளினலன்றி வேறில்லை யாதலால்; அருள் வழிப்பட்டு நிற்பார், அதாவது, "நாமினுனுமகந்தை தீர்ந்தோராகி" எல்லாம் திருவருட் பிரஸாதமென்ருப்பாருக்கு "இருவினைநேரொப்பு" நேர்தலால், அவர்களை நன்மைதீமையென்னும் இருவினையுஞ் சேரா. எல்லாம் கடவுளின் திருவிளையாடலாகவுடன்பட்டு நிற்பார். ஆனல் அவர்கள் சக்தியற்றவர்களோ வெனின், இல்லை யில்லை. காரண காரிய தோரணையுரைப்பான் உண்மையை ஒதினதன்றி வேறல்ல. விவேகிகள், மணிமேகலையில் சொல்லியபடி,—

"தெய்வந்தொழாஅள் கொழுநற்றொழுதெழுவாள்
பெய்யெனப் பெய்யும் பெருமழை யென்றவப்
பொய்யில் புலவன் பொருளுரை தேருய்."—

என்ற மூதுரை வழிப்பட்டு திருவள்ளுவர் கூறியதின் "பொருளுரை"யான லக்ஷியார்த்தத்தை யுணர்ந்து உண்மையிற்றேறி யுய்வர். மழையின் வல்லமை கூறிப், பின்னர் அதன் இன்றியமையாமையுங் கூறுகிருர்:—

(6) "விசும்பிற் றுளிவீழி னல்லான்மற்றுங்கே
பசும்புற் றலைகாண் பரிது."

[மேகத்திற் றுளி வீழக் காண்பதல்லது, வீழாதாயின் அப்பொழுதே பசும்புல்லினது தலையையுங் காண்டல் அரிது.—ஓரறிவுயிரும் இல்லை யென்பதாம்.—பரிமேலழகருரை.]

விசும்பிலிருந்து மழைத்துளி வீழ்ந்தாலல்லது ஒரு பசும்புல்தானும் தலையெடுக்காது. "பசும்புல்"—"ஓரறிவுயிர்." ஐம்பொறி புலனில் "ஓரறிவு" ஆகிய ஸ்பரிசஞானம் மாத்திரம் அமைந்துள்ளது. லயக்கிரமத்தில் ரூபரஸகந்தமெல்லா மொடுங்கிய விடத்தும் எஞ்சி நிற்பது ஸ்பரிசஞானமாம். இது மற்றமூன்றையுந் தன்னுளடக்கி நிற்கும். "மிஸ் ஹெலென் கெல்லர்" (Miss Helen Keller) என்னும் ஒரு அமெரிக்கமாது, பிறவிமுதற்கொண்டே கேளாச்செவி, காணுக்கண், பேசாவாய், முகராமூக்குப்படைத்த நிர்ப்பாக்கியளாயினும், அவளது

ஸ்பரிசஞானமொன்றினாலே அவளைப்பெற்றோர் அவளைத் தேற்றுவிக்க அவள் இப்பொழுது அந்த ஸ்பரிசஞானமொன்றின் அதீதமான முதிர்ச்சியாலே மற்றப்பொறிகளில்லாக் குறையை நிறைவு செய்துக்கொண்டு தத்துவ ஞானம்பெற்றுக்கிரந்தங்களும் எழுதியிருக்கிறாள். மழையில்லாவிடில் பசும்புல்லும் தலையெடுக்காது, புலன் பொறிகளெல்லா மொடுங்கி சுத்தஜடமாகப் போம். கல்லொன்றே மழையின்றி யிருக்கத் தக்கதாக, எல்லாம் ஜடாத்மக மாய்விடுமென்பது பொருள்.

* * *

"உயிரெனப்படுவே துள்ளிருந்தோங்குவது".

"Evolution is the Law of Life". அருளில்லையாகின் அறிவுடன்கூடிய உயிருமில்லையென்பது பொருள்.

"ஓங்காரியென்பா ளவளொரு பெண்பிள்ளை
நீங்காதபச்சை நிறத்தை யுடையவள்
ஆங்காரியாகியே ஐவரைப் பெற்றிட்டு
ரீங்காரத்துள்ளே யினிதிருந்தாளே."

—திருமந்திரம்.

மழைமுகங் காணாப்பயிர்போல் தாய்முகங் காணா அறிவுயிர் தலையெடுக்காது. தாய் என்பது இங்கு "அருட்தாய் தன்னை"யென்று கொள்க. அது "ஆதியாய் நின்றஅறிவு"தானேயாகும்.

"அறிவார் பராசக்தி யானந்த மென்பர்
அறிவார் அறிவுரு வாமவ ளென்பர்
அறிவார் கருமம் அவளிச்சை யென்பர்
அறிவார் பரானு மவளிடந் தானே."

—திருமந்திரம்.

காரியார்த்தமாயன்றி காரணத்திற்கும் (அருள்) மழைவேண்டு மென்பதைப் பின்வரும் பாட்டால் தெரிவிக்கிறார்:—

7. "நெடுங்கடலுந் தன்னீர்மை குன்றுந் தடிந்தெழிலி
தானல்கா தாகி விடின்."

["அளவில்லாத கடலும் தன்னியல்பு குறையும், மேகந்தான் அதனைக்குறைத்து அதன்கட் பெய்யாது விடுமாயின்." தன்னியல்பு குறைதலாவது நீர்வாழுயிர்கள் பிறவாமையும், மணி முதலாயின முத்து பவளம், படாமையுமாம்.—பரிமேலழகருரை.]

நாவிலாவிடத்து மாலை சிதறுண்டு போதல் போல, மழை (அருள்) இலாவிடத்து, அதற்குக் காரணமாகிய "நெடுங்கடலும் தன்னீர்மை குன்றும்." "அறிவார் பரானுமவளிடந்தானே" யென்றதிருமந்திரத்தினால் காரணங்கடந்த கடவுளும், பராசக்தி ரூப அருள்வடிவில்லையாயின் "தன் நீர்மை குன்றும்" என்பது பொருள் (லக்ஷியார்த்தம்). இதற்கு மேற்கோளாக ஸ்ரீமத் ஆதி சங்கராசாரிய ஸ்வாமிகள் அருளிச்செய்த சௌந்தரிய லஹரியில் முதல் மந்திரத்தைப் பார்க்க. அதன் மொழிபெயர்ப்பு இது:—

"சிவமெனும் பொருளும் ஆதிசத்தி யொடுசேரின்
எத்தொழிலும் வல்லதாம்
இவள் பிரிந்திடினியங்குதற் குமரிதரிதென
மறையிரைக்குமால்,
நவபெரும் புவன மெவ்வகைத்தொழில் நடத்தி
யாவரும் வழுத்துதாள்
அவனியின் கணொரு தவமிலார்
பணியலாவதோ பரவலாவதோ."

முதலிரண்டடிகளாலே, "அறிவார் கருமமவளிச்சை யென்பர், அறிவார் பரானுமவளிடந் தானே" என்ற திருமந்திரோபதேசத்தினுண்மைதானே சுருதியுக்தி யனுபவங்களால் உறுதிப்பட்டது விளங்கும். இவ்வைழுபாட்டாலும் உலகம் நடத்தற் கேதுவாதல் கூறப்பட்ட" தென்பர் மேலோர். நவவ்யூகரூபமான "நவபெரும்புவன மெவ்வகைத்தொழில்நடத்தி யாவரும் வழுத்துதாள்" என்ற பராசத்தியின் திருவடிமஹிமையே ஏதுவாதலால் அதைக் காரண காரிய தோரணைபற்றிக் காரியவுலகில் "வான்"= மழையாகக்கொண்டு சகஜஞானத்திருந்து கூறினார். "ஏகமேவாத்விதீயம்" என்ற கடவுளுக்கும், "அனேகம்" என்றும் "நவபெரும்புவன"

மென்றும் சொல்லப்பெற்ற நாமரூபப் பிரபஞ்சத்திற்கும் உபாதிபேதத்தினல் மட்டும் பேதபேயன்றி உண்மையிற் பேதமில்லையாதும், இந்த உபாதி பேதமும் காரியகாரண தோரணை யறிந்த யோகசித்தர்களுக்கும் சகஜஞானிகளுக்கும் சிருஷ்டி-ஸ்திதி-லயக்கிரமானுசாரம் ஒன்றிலிருந்து தானே விரிந்து பரவிப்பின்னும் தலைகீழாகத்தானே யொடுங்குதலாகி அந்த ஒன்றில் தானே லயித்து நிற்பதால் "ஸர்வம் பிரஹ்மமயம்" என்கிற அபரோக்ஷானுபூதி அவர்களுக்கு அப்பியாஸ முதிர்ச்சியில் யாதொரு பிரயத்தனமுமின்றி தன்னிற்றானய் எல்லாம் தன்மயமாய் விளங்குகிறது. அப்பொழுது அவர்கள் வாய்ப்பிறப் பெல்லாம் ஸரஸ்வதி வாக்காகின்றது. திருவள்ளுவமாலையில் நாமகள்தானே தான் முதலில் அதாவது படைப்புக்காலத்தில் நான்முகன் நாவிலிருந்து நான்கு வேதங்களையும் பாடி, பின்னர்மத்தியில் வியாசர் வாயிலிருந்து பாரதம் பாடி, அதன் பின் "வள்ளுவன் வாயதென்வாக்கு" என்று சொல்லியிருக்கிறாள். இதனாலே நான்மறை பூர்வவேதமென்றும், பாரதம் மத்திய வேதமென்றும், திருக்குறள் உத்தரவேத மென்றும் சொல்லியதாயிற்று. வேதமந்திரங்களை வெறும் குப்பைகூள மென்றாற்போல, ஸ்தூலபுத்தி தடித்தவர் மழைபெய்யா விடின் புல்லும் முளைக்காது என்ற விஷயத்தைத் திருவள்ளுவர் கூறிவிட்டதென்ன அதிசயமோ வென்று புன்மொழி கூறுவர். அவர் விஷயப் பற்று அறவொழிந்த ஸஹஜஞானியாதலாலும், யோகசித்தாராதலாலும், அவர் "திரையற்ற நீர்போல் சிந்தைதெளிந்தார்", ரிற் சேர்ந்தவர். "சித்தவிருத்தி நிரோதனா" சித்தியாலே அவ்வாறு சிந்தை தெளியப் பெற்றார்க்குப் "புரையற்றிருந்தான் புரிசடையோனே" யென்ற திருமந்திரப்படி, அவருக்கு எல்லாம் பரிபூரணமாகவே அறிவிற்பட்டது. ஆகையால் அவரது வாய்ப்பிறப்பெல்லாம் பரிபூரணமாகவே யர்த்தம் செய்து கொள்ளற் கேற்றனவாம்.

வானம்வறக்குமேல் "உருவத்தாலாயபயனு †" மில்லை.

இவ்வேழுபாட்டாலும் உலகு நடத்தற் கேதுவாதல் கூறி இனி அறம் பொருள் இன்பமாகிய புருஷார்த்தங்களுக்கும் வான் (மழை) இன்றியமையா வென்பதை யெடுத்துச்சொல்கிறார்.

(8.) "சிறப்பொடு பூசனை செல்லாது வானம்
வறக்குமேல் வானோர்க்கு மீண்டு."

'வானம் வறக்குமேல்'=மழைபெய்யாதாகில் வானோர்க்கும் இவ்வுலகில் சிறப்பொடு பூசனை செல்லாது. நித்திய நைமித்திக தர்மங்கள் பிறழ்படுவதால் தேவபூஜைகளும் தவறுபடும் என்றார். "அவனியின் கண் ஒருதவமிலார் பணியலாவதோ" என்றதனல் தவப்பயன் பெற்றாரன்றி மற்றவர் பராசக்தியின் தாளை வணங்க வல்லாராகார் என்றார். இவர் அஃதோடு நில்லாமல், அருண்மழை பெய்யாதாகில் பரார்த்தமான தேவிபூஜைமட்டு மல்ல, அபரார்த்தமான தேவதாபூசனைகளும் நடவாது என்றார். எனெனில் உலகம் இருளடைந்துபோமால் வானோர் பூசை நடவாதோடு உலகின்கண் தானம், தவம் இரண்டும் தங்கா; அதனல் இல்லறம், துறவறமிரண்டும் கெட்டுப்போ மென்பான்,—

9. "தானந் தவமிரண்டுந் தங்கா வியனுலகம்
வானம் வழங்கா தெனின்."—என்றார்.

தானம் என்பது பாத்திரமறிந்து தீவினை விட்டீட்டிய பொருளைக் கொடுத்தல். தவம் என்பது லக்ஷியமறிந்து தீவினை விட்டோட்டிய மனதை விஷயத்திற் செல்லாது தடுத்துக் கட்டல். எனெனில் மழைபெய்யாதெனின் அருள் (ஜீவகாருண்யம்), பொருள் (உலகின்பங்களை யனுபவிப்பதற்கான பொருள்) இரண்டும் இலவாம். "அருளிலார்க்கில்லை யவ்வுலகம், பொருளிலார்க்கில்லை யிவ்வுலகம்" என்ற வாசகப்படி,

† "தருமம் பொருள்காமம் வீடெனு நான்கும்
உருவத்தா லாய பயன்."—ஔவைகுறள்.

மழையில்லையாயின் மக்கள்கள் இகபரசுகமிரண்டுங் கெட்டழிவர் என்று சொல்லியதற்குக்காரணம் பின்வரும் பாட்டிற் சொல்கிறார்.—

10. "நீரின் றமையா துலகெனின் யார்யார்க்கும்
வானின் றமையா தொழுக்கு."

எவ்வகை மேம்பட்டார்க்கும் நீரையின்றி உலகியல் முறையான (போக போக்கியங்கள்) அமையாதென்பது வெளிப்படை யாதலால், வானையின்றி ஸநாதனமான ஒழுக்கங்கள் அமையா.

அநித்தியமான ஸ்வர்க்காதிபோக உலகின்பங்களுக்கும் நித்திய நிர்மலாகாரமான ஸநாதநவொழுக்கத்துக்கும் வான் (மழை) அவசியம். எப்படியெனில், ஒன்றிற்கு நீர் இன்றியமையாததுபோல் மற்றொன்றுக்கு மழை இன்றியமையாதது. சிற்றின்பம், பேரின்பமிரண்டுக்கும் காலோபாதியினல் மட்டும் பேதமேயன்றி ஆத்மார்த்தமான இன்பசுகத்தில் பேதமில்லை. காரணகாரிய பேதத்தாலுண்டான பேதத்தை மழை-நீர் என்கிற காரணகாரிய வஸ்துக்களால் எடுத்துக்காட்டி ரூபித்தார். காரியப்பிரபஞ்சத்தில் எப்படியோ அப்படியே காரணப்பிரபஞ்சத்திலும் சுகானுபோகங்களுக்கு இன்றியமையாத காரணமொன்றுண்டு. அது காரியத்தில் நீர்போல் காரணத்தில் மழை. வியஷ்டிஜீவன் நீரின்றி யுலகியல் அறியாததுபோல, சமஷ்டி ஜீவனை மன்குலம் மழையின்றி ஸநாதநமான பிரகிருதி தர்மத்தை யுணர்வதில்லை. ஏனெனில், உலகின்பப்பொருள்களுக்கு நீரில் உற்பத்திலயம் இருப்பதுபோல, ஸநாதநமான பிரகிருதி தர்மமான தத்துவப்பொருள்களுக்கு விரிவொடுக்கமென்னும் "Law of Evolution & Involution" ஸ்ரீசக்ரத்தில் உற்பத்திலயம் உண்டு. மழையில்லாவிடில், அந்த ஸ்ரீசக்ரதம் "செல்லாது தெற்றிற்று நின்று."

* * *

"இமம்மேவருண ச்ருதீஹவம்."

இவ்வாறாக முன்னர் "கடவுள் வாழ்த்து"க் கூறிப் பின்னர் "வான்சிறப்பு" என்னுந்தலைப் பின்கீழ் கடவுளின் திருவருட் சக்தியைக் கூறுவான் வேதத்தில் வருண சப்தத்தால் துதிக்கப்பட்ட ஆவரணசக்தியோடு கூடிய பரமாத்மாவை வான் சப்தார்த்த லக்ஷியமான "மழை பொழிதற்" பெயரால் கடவுளின் ஆவரணசக்தியின் சிறப்பைக் கூறினர்.

கடவுளை வாழ்த்தி அவரிருப்பிடங் கூறுமிடல் "பேரைச்சொல்லி ஊரைமறைத்த"தொக்கும். "மலர்மிசை யேகினன்" கடவுளிருக்குமூர் அண்டத்தில் வானும் பிண்டத்தில் சிற்றம்பலமு மாதலாலும், அந்தவானின்றிழிவது (அருள்) மழையாதலாலும் அதன் சிறப்புக் கூறினர்.

"மலைமகள் துணைவன் முக்கணன்
நீல மணிமிடற்றவ னெனவாரேனர்
திகைனே யுன்னைத் தஹரமாங் குகையுட்
தியானஞ் செய்திடு முறைசெப்பி
அரைவன் முகந்தனிச ரேமிடவையும் ஐய!
நின்விபூதியென் றுரைக்குங்கு
மலவிருள் தமித்துச் சிவச்சுடர் விளக்க
வந்த கைவல்ய மறையே."

என்றதனல் கடவுளைத் தியானஞ் செய்யுமுறையுமிடனுங் குறிக்கப்பட்டது.

இங்கே குறிப்பிட்டவாறு தஹரோபாசனை செய்து கடவுளைக்கண்டு வழிபட்டு, அறவழியேநின்று அவரிருக்குமிடத்தையுங் காட்டவல்லார் முற்றத்துறந்த முனிவராதலால், வான் சிறப்புக்குப்பின் நீத்தார்பெருமை யென்னுமதிகாரம் இயல்பினனே நின்றது விளங்கும்.

எழுத்திலாத முதலெழுத்தோதும் "ஆதிபகவனை" முதலாகவுடைய உலகியல் கூறுவான் அந்த "ஆதிபகவனின்" அனுதிகாரணமான கடவுள் வாழ்த்துக்கூறிப் பின்னர், அவ்வெழுத்தலாத முதலெழுத்துப் பதிந்துள்ள ஏடலாத வெட்டின் (சிதாகாசத்தின்) தகைமையை" வான்சிறப்பு அதிகாரத்திற்கூறியதன் பின்னர், "ஏடலாத எட்டிலுள்ள எழுதாக்ஷரம் வாசிக்க" வல்லாரான 'நீத்தார்பெருமையைக்கூறத்தொடங்குகிறர். பிறகு அவர் சாதனை பற்றிச்சாதித்து நின்ற "அறன்வலியுணர்த்தலும்" இப்படியே காரணகாரிய தோரணைமுறையானே பொருந்தும். ஓம்தத்ஸத்.

# Easy lessons in Economics.

## Lesson V. Wages.

## குடிவாழ்க்கை.

### பாடம் V. கூலி.



லி என்பது நாம் செய்யும வேலைக்குத் தாரகமாகப் பெறும்பொருளே எனலாம். மண்வெட்டியை வெட்டுவோரும், கோடாரி எடுத்து உடைப்பவரும் பெறுவதுமாத்திரமே கூலி என்று எண்ணமுடியாது. பித்தளை, செம்பு முதலிய தகட்டைவாங்கிப் பாத்திரமாகச் செய்து விற்கும் கம்மாளன் தான்விற்கும் பாத்திரத்தின் மூலமாய்க் கைம்முதலோடு கூலியையும் பெறுகிறான். துணியைவாங்கி சட்டையாகச் செய்து விற்கிறவன் தான்விற்கும் சட்டையின் மூலமாய்த்துணியின் விலையுடன் தைக்கும்கூலியையும் அடைகின்றான். பூமியை வாரம் அல்லது குத்தகைக்கு அடைத்துவிடும் சொந்தக்காரனும், சாகுபடி சரியாய் நடத்தப்படுகிறதாவென்று தினமும் பூமியைச்சுற்றிப்பார்த்து வரும் வேலைக்கு தான் பெறும் தானியத்தில் சிறிதுபாகத்தை கூலியென்று மதிக்கவேண்டியதே. பட்டுநூற்காரனுக்கும் நெய்கிறசேடனுக்கும் முதலைக் கடனாகக் கொடுத்துதவும் சாவுகாரனும், முதலையவர்கள் தின்று விடாமல் பார்க்கவும், அவர்கள் செய்த துணிகளை வசூல் செய்யவும், தாங்களும் தங்கள் காரியஸ்தர் மூலமாய்ச்செய்யும் வேலைக்கிடாக, தங்கள்முதலுக்கு வட்டியுடன் கூலியையும் எதிர்பார்க்க வேண்டியவனாகின்றான். இராஜாங்க உத்தியோகஸ்தர்களுக்கு கிடைக்கும் சம்பளமும் வக்கீல்களுக்குக் கொடுக்கப்படும் தொகையும் கூலியென்றே கருதவேண்டும்.

பாலங்கள் கட்டவும், பாதைகள் போடவும் ஒப்பந்தங்கள் பெறும் தனவான்கள் அதிக இலாப மடைவது சகஜமானாலும், அந்த இலாபத்தில்ஒருபாகம் அவர்கள் போட்ட முதலுக்கு வட்டியாக, மற்றது அவர்கள் செய்த மேற்பார்வைக்குக் கூலியேதவிர மற்றப்படியன்று. இவ்விதமாக எத்தொழிலுக்கும் தேக சிரமமும் புத்திகூர்மையும் அவசியமாயினும் அதற்கு ஈடாகப் பெறுவது கூலியேயாகும். கூலியென்பது பெரும்பாலும் பணமொன்றையே குறிப்பது வழக்கம். நெய்கிறவன் நெய்ததுணியைக் கூலியாக அடைந்தாலும், அவன் அந்தத் துணியைக் கிரயப்படுத்தியே கூலியையெடுத்து தனக்கு அவசியமான உணவுப் பொருள்முதலியவற்றைப் பெறுதல்வேண்டும். பெறும் கூலியாகிய பணம் பணமாகவே யிருந்தால் பிரயோஜனமற்றதாகுமாதலால் அதற்குபதிலாகவடையும் உணவுப்பொருள், ஆடை, இருப்பிடம் முதலிய ஜீவனத்திற்குரிய சாதனங்களையே கூலியென்று கருதவேண்டியிருக்கிறது. இச்சாதனங்களைப் பெறுவதற்கே ஒவ்வொரு வேலைக்காரனும் பாடுபடுகிறான்.

ஒரு குடும்பஸ்தனுக்கு ஒரு வருஷத்தில் தனது குடும்பத்திற்கு 200 ரூபாய் போதுமானதாயிருக்கலாம். மற்ற சில வருஷங்களில் அது எட்டுமாதத்திற்கும் போதாததாக ஏற்படுகிறபடியால், மனிதருக்கு அவசியமான சாதனங்களின் விலையில் ஏற்றத்தாழ்வே முக்கியகாரணமென்று கருதவேண்டியதாகின்றது. உணவுப்பொருள், ஆடை, இருப்பிடம் முதலிய அவசியமான சாதனங்களுக்கு விலை ஏறியிருப்பதற்குத், தகுந்த விதமாய் வேலைசெய்யும் கூலிக்காரனுக்கு கூலிகிடைப்பது நியாயமாகவிருக்க, கூலியையே நம்பியிருக்கப்பட்ட பலருக்கு அநுசரியாகக் கிடைக்கிறதில்லை யென்ற கூக்குரல் எங்கு மொரேவிதமாயிருக்கிறது. வாஸ்தவத்தில் இருபது வருஷத்திற்குமுன் 15 ரூபாய் மாதசம்பளத்திலிருந்த ஒருவர் தன்

குடும்பத்திலுள்ள ஐந்து நபர்களைக் காப்பாற்றிக்கொண்டு மரியாதையாய் ஜீவனஞ்செய்து சிறிது கைமுதலும் சேர்த்துவந்தார். இப்பொழுதோ அதே 15 ரூபாய் மாதச்சம்பளத்திலுள்ள ஒருவர் மனைவியும் தானுமாகிய குடும்பத்தைக் காப்பாற்ற அசக்தனாகிக் கடன்பட்டும் இராப்பட்டினி கிடக்கிறார். இதனால் கூலிக்காரர்களுடைய கூலி உயரவில்லையென்றும் அவனுக்கு அவசியமான பொருள்களின் விலையானது ஏறியிருக்கிறதென்றும் விசிதமாகின்றது.

முதலாளியொருவன் பிறனுக்குத் தகுந்த ஈட்டின்பேரில் கடன்கொடுத்து, முதல்போன வழியை கவனியாது வட்டியைப் பெறுகிறான். அம்முதலைக்கொண்டு, தானே ஒரு தொழிலைச் செய்வானாயின், முதலுக்குவட்டியுடன் தொழிலிலுள்ள அபாயத்திற்குத் தக்கபடி கூலியும் பெறவேண்டியவனாகின்றான். ஆதலால் முதல் நம்மிடமுண்டாயின் சிரமமின்றி கிடைக்கக்கூடிய வட்டியையும் சிரமத்திற்குத் தகுந்த இலாபமாகிய கூலியையும் பெறலாமென்பது திண்ணம். ஆனால் சிரமப்பட்டாலொழிய கூலியாகிய இலாபம் கிட்டாது.

ஒவ்வொரு முதலாளியும் தன்னிடம் வேலைசெய்யும் கூலிக்காரனுக்கு அவனுடைய சக்திக்குத்தக்கபடி கூலிகொடுப்பதாக சொல்லுகிறார்களேயன்றி குறைத்துக்கொடுப்பதாக சொல்லுகிறார்களில்லை. தன் ஜீவனம் சுகமாக நடப்பதற்குத்தகுந்த அளவு கூலிபெறுகிற கூலிக்காரன் அவற்றிற்குத்தக்க வேலைசெய்கிறதில்லையென்று சொல்லமுடியாது. வேலைக்குத்தக்க கூலியை முதலாளி தன்னிடம் வேலைசெய்கிறவர்களுக்குக் கொடாவிட்டால் கூலிக்காரனுடைய மெய்வலி குறையும். மெய்வலிகுன்ற வேலைத்திறமையும் குறையும். ஆகவே முதலாளி தன்னிடம் வேலைசெய்யும் கூலிக்காரனுக்கு அவன் தேகவலிமை குன்றாவண்ணம் சுகஜீவனம் செய்வதற்குத் தக்ககூலியுடன் உற்சாகமும் தென்புமுண்டாகி, சற்று கைப்பொருள் சேர்த்துவைக்கத் தகுந்த விதம் வருஷவாரி இனமாகவாவது, கூலியுடன்சற்றுசேர்த்தியாவது கொடுக்கவேண்டும்.

இங்கிலாந்து அமெரிகா முதலிய தேசங்களில் பெரும் முதல்வைத்து தொழில் செய்வோர் தங்களிடம் வேலைசெய்யும் கூலிக்காரர்களுக்குத் தகுந்த விதமாய்க் கூலிகொடுப்பதுடன் வருஷவாரி வரவு செலவு கணக்குகளைப் பார்த்து முடிவு செய்யும் பொழுது, முதலாளி தான் போட்டிருக்கிற முதலுக்கு வட்டியை மட்டுமெடுத்துக்கொண்டு, ஒவ்வொரு கூலிக்காரனையும் செவ்வையாகக்கவனித்து, கல்யாணமாகாதவனாயிருந்தால் அதற்கென்று ஒரு தொகையும், வீடு இல்லாதவனாயிருந்தால் அதற்கென்று சிறிது தொகையும், குழந்தை குட்டிகள் அதிகப்பட்டிருந்தால் அதற்கென்று சிறிது தொகையும் கொடுத்துதவுவதன்றி, அவர்கள் உல்லாசமாக விளையாடுவதற்கு வேண்டிய பந்தாடு மேடை முதலியவைகளையும் அறிவு பெருக்கத்திற்குத் தக்க புஸ்தகசாலை, பத்திரிகாசாலை முதலியவைகளையும், கூலிக்காரர்களின் பிள்ளைகளும் பெண்களும் படிக்கத்தகுந்த பாடசாலைகளையும், தங்கள் தொழிற்சாலைகளுக்குள் அமைத்தும், அவர்கள் நோயின்றி சுகமாயிருக்கும்பொருட்டு வைத்தியசாலைகளை ஏற்படுத்தி மருந்துகளை இனாமாகக்கொடுப்பித்தும், கூலிக்காரர்களின் தேகசுகமும் மனவுற்சாகமுமே தன் கைமுதலாகிய பெருந்தொகையானது போடப்பட்டிருக்கும் பத்திரமான இரும்புப் பெட்டியென்று கருதுகிறார்கள்.

இத்தேசத்திலோ, குயவன் தனக்கு வேண்டிய களிமண்ணை வேண்டிய அளவு தூக்கிவைத்து ஒட்டிக் கொண்டுவந்து மண்ணை வீட்டுவாசலிற் தள்ளிக்கொண்டும், வண்ணான் தன் மோழிகையை சுமக்க முடியாத அளவு ஆற்றிலிருந்து சுமத்திக்கொண்டு வந்து வீட்டில் இ

க்கிக்கொண்டும், நன்றி இன்றித் தனது இடது காலால் இரண்டுதை புதைத்து, தெருவழியில் குப்பையைப் பொறுக்கித் தின்னும்படி ஒட்டி விடப்படுகிற கழுதைக்கும் ஈனமாய் வேண்டிய வரையில் வேலையை வாங்கிக்கொண்டு ஈனமிரக்கமின்றி, குறைந்த கூலியையும் சரியாய்க்கொடாமல் கூலிக்காரர்களைவருத்தி வாட்டுகிறார்கள். இப்படி நடத்தினால் கூலிக்காரர்கள் தேகமன உறுதியாகவும் உற்சாகத்துடனும் வேலைசெய்வதெப்படி? அவன் நிலையாக நின்று வேலை செய்வதெங்ஙனம்? முதலாளி இலாப மடைவதெவ்விதம்? தொழில் செழிப்பதும் தேசம் முன்னுக்கு வருவது மெவ்வாறு? கூலிக்காரர்கள் சுகமே தொழில் விர்த்திக்கு முக்கியமென்பதைக் கருதாதவர்கள் நீடித்த காலம் முதலாளிகளாயிரார்.

T. C. வெங்கடரமணய்யர்.

---

## THE "MENTAL CAUSE"—

### Secret of the "Mental Science" Cure.

## "மனமாயை" என்னும் "மார்ஜாலவித்தை."



"மனமாயை மாயை யிம்மாயை மயக்க
மனமாயை தான்மாயு மற்றொன்று மில்லை,
பினைமாய்வ தில்லை பிதற்றவும் வேண்டாந்
தனையாய்ந் திருப்பது தத்துவந் தானே."
—திருமந்திரம்.

"மெய்யெலாம் மையலாள் மயக்கமறச் செப்ப
[லாமே."
—சித்தவாக்கு.



யக்கத்தை யுண்டுபண்ணுவது மாயை. இந்த மாயையின் சக்தி இருவிதமாம். ஒன்று உள்ளதை மறைப்பது; மற்றொன்று இல்லாதை உண்டுபோல் தோற்றுவிப்பது. இந்த இரண்டும் உலக வியவஹாரங்களுக்கெல்லாம் காரணமாயிருக்கிறது. இவ்விரண்டுமற்றால் வியவஹாரமுமற்றது. இதுபோது. இதன் சிறப்பிலக்கணமே மேற்றிசையார் 'Mental Science' என்று சொல்லும் மனதைக்கொண்டு தேஹவியாதிகளைச் சொஸ்தம் செய்யும் முறை யேற்பட்டதற்குக் காரணம். இதைக் காரியத்திலுபயோகிப்பதில் எத்தனையோவித தந்திரங்கள் உண்டு. அவற்றை யெல்லாம் வரையறுத்துரைப்பதில் பிரயோசனமில்லை. ஏனெனில், ஒன்று ஒருவருக்குப்பலித்தால் அதுவே யெல்லாருக்கும் பலிக்கும் என்றுசொல்லக்கூடாது. கூடமாயுள்ள மந்திரத்தை யுள்ளபடியுணராமல், தந்திரத்தை மாத்திரமுபயோகிப்போர், மதியிழந்து, கதியிழந்து, பிழைக்கும் வழியிழந்து பரிதபிக்க வேண்டிநேரிடும். சொற்பகாலத்துக்கு ஏதோ ஜனங்களை யேமாற்றிப் பணம் பறிக்கலாம். ஆனால்சீக்கிரத்தில் அவர்களுடைய சூது வெளியாகிவிடும்.

"மந்த்ரராஜாய வித்மஹே, மஹாமந்த்ராய தீமஹி, தன்னோமந்த்ரப் ப்ரசோதயாத்"—என்பது மந்திரங்களை யுபயோகிக்கும் உண்மை வழி.

[1] முதலாவது "மந்திரராஜா"வை யறிந்து கொள்வோமாக!

[2] பிறகு "மஹாமந்திரத்தை" தியானிப்போமாக!

[3] மந்த்ரராஜாவை யறிந்துக் கொண்டு மஹாமந்த்ரத்தை தியானித்து தியேயாகாரமானபின் அந்தமந்த்ர சக்தியானது நம் கருவி

கரணங்களாகிய புத்தி, மனசு, முதலானவைகளையும் சுரோத்திராதி இந்திரியங்களையும் பிரகாசிக்கச் செய்யட்டும்.

இப்படி பிரகாசிக்கச் செய்தபின் அந்த மந்த்ரசக்தியானது உபாஸகனுக்குப் பிரத்தியக்ஷமாய் நிற்கும். தற்பிரயோசனத்தை நாடாத உத்தம சீலனாயிருந்தால் அம்மந்திர சக்தி அவனுக்கு வசப்பட்டு நிற்கும். ஸ்ரீசங்கரபகவானுக்கு சாரதாதேவி வசமானதும், ஸ்ரீ வித்யாரண்ய ஸ்வாமிகளுக்கு காயத்ரீதேவதை வசமானதும், அவர்கள் அத்தேவதைகளின் தரிசனமே பூரணதிருப்தியைக் கொடுத்ததென்று இருந்ததனால்தான். காமியதபஸிகளுக்கு இச்சித்த பலனைமட்டும் கொடுக்கும். முன்னவர்களுக்கு "மந்திர திருஷ்டா"வென்று பெயர். காமியதபஸிகளுக்கு இச்சித்த காரியமட்டும் பலிப்பதால் அவர்களுக்கு மந்திரவாதிகளென்று பேர். மந்திரதிருஷ்டாக்களான மஹான்கள் லோகபரிபாலனார்த்தம் மந்திரசக்தியைக் காரியத்திலுபயோகிக்க மனமுவப்பார்களாயின் அவர்களுக்கு 'மந்திரசித்தர்கள்' என்றுபெயர். இவர்கள் பிரதிபலனை நாடாது லோகோபகாரமாகவே யாதையும் செய்வர். "உருவிலாகும் ஸித்தியெல்லாம் உலகத்தோர்க்கே" யென்பது அவர்களுடைய மேலான கொள்கை.

மந்திரத்தை உபயோகிக்கத் தந்திரசாதனம் வேண்டும். மந்த்ரமும் தந்த்ரமும் உயிருடல்போலவும், தேஹி தேஹம்போலவும் இணைபிரியாத சம்பந்தமுள்ளது. ஒன்றிலொன்று ஒடுங்கி விரிந்து தோன்றி மறையுமேயன்றி இரண்டையும் வெவ்வேறாக துவைதப்படுத்திப் பிரித்தல் ஆகாது.

"மனம் ஒருவழிப்பட்டது மந்திர"மானால், அது ஒருவழிப்படுமார்க்கம் தந்திரமாம். "மற்றொன்று மற்றொன்று மனோபவம்" என்றபடி பஹிர்முகப்பட்ட மனது ஒன்றைவிட்டொன்று பற்றித்திரியும். அப்படித்திரியும் மனம் "ஒருவழிப்படுங்கால்" அது பஹிர்முகம் விட்டுத்திரும்பி "அந்தர்முகப்பட்டு" ஏகாக்ர சித்தத்தினால் சூக்ஷ்மவடிவாகி, "பற்றொன்று பற்றொன்று பவோபவம்" என்கிறபடி அதன் சூக்ஷ்மவுணர்ச்சியால் அந்தர்லக்ஷ்யமான ஒன்றையே பற்றிநிற்கும். இப்படித் திரும்பிய மனம் லயக்கிரமப்படி ஒன்றைவிட்டொன்றில் ஒடுங்கி காரியகாரணத் தொடர்ச்சிக்கிரமேண ஆதிகாரணமான பிந்துவில் ஒடுங்கும்.

இப்படியாகக் காரியவுலகம்ஏழும் ஒன்றொன்றாக ஒழிய இவையெல்லாமொழிந்த காரியப்பாழாம் "ஒழிவில்" ஒடுங்கியமனம், அந்தச் சூனியவெளிதாண்டி காரணவுலகாம் உட்பிரபஞ்சங்கள் ஏழையும் விசாரித்துத்தள்ளி காரணப்பாழாம் "கடுவெளி" தன்னில் ஒடுங்கிச் சற்று இளைப்பாறிய பின்னர் அதுவுங்கடந்துள்ள "காரியகாரண வாசனைப்பற்று" தானும் பொருதாகி சாந்தோபசாந்தத்தைநாடி அஃதையும் விட்டொழிக்க, யோகபூமிகளேழும் உபசாந்தத்தைத் தரும் சித்வெளியாகி, "ஆதி" யென்று சொல்லும் "மனஉபாதி" நீங்கி, நித்தமுத்த நிர்மலசுத்த சாந்தி" சித்திக்கும். இஃதைத் திருமூலதேவர் ஒரு திருமந்திரத்தில் வெகுஅழகாய் உபதேசித்திருக்கிறார்:—

"காரியமேழுங் கரந்திடுமாயையுள்
காரணமேழுங் கரக்குங்கடுவெளி
காரியகாரண வாதனைப்பற்றறப்
பாரணவுமுப சாந்தப்பரிசிதே."

காரியகாரணதோரணை யுணர்த்தும் வழியொன்றெதுவோ அஃதே "தந்த்ரம்" என்று சொல்லப்படும். இது மந்த்ர சப்தார்த்தம் சித்ரகுப்தமாய் (இரகஸிய சித்திரரூபமாய்) விளங்கும் வைபவத்தை விளக்குவதாம். சித்ரகுப்தமாயுள்ள இந்த சூக்ஷ்ம ரகஸியத்தை "ஏடலாத எட்டிலுள்ள எழுதாக்ஷரம் வாசிக்கலாம்" என்றுண்மை யோதிய மந்த்ர திருஷ்

டாக்கள் மாத்திரமே யறிவார்கள். அவர்கள் தம்மையடுத்த சற்சிஷர்பால் வைத்த கருணை மிகுதியால் அந்த குப்த வித்யையை ஸ்பஷ்டமாக விளக்கிக்காட்டும் பொருட்டு அவைகளை யந்திரங்களில் அடைத்து "யந்திர ஸ்தாபனம்" செய்வார்கள். "உடல்மே லுயிர்வந் தொன்றுவ தியல்பே" என்ற இலக்கண சூத்திரப்படி சித்ரகுப்தமாயுள்ள மந்திரசக்திகள் அவற்றின் இயல்புக்கேற்க வமைக்கப்பட்ட "யந்திரங்கள்" தன்னில் வந்தொன்றுவதானது "பிராகிருத தர்மம்" என்னும் "இயல்பாம்."

"தந்த்ராராஜாயவித்மஹே, மஹாதந்த்ராய தீமஹி,
தன்னோதந்த்ரப்ரசோதயாத்."

தந்தாராஜாவை யறிந்து, மஹாதந்த்ரத்தை தியானம் செய்து தியேயாகாரமானபின், அந்தத் தந்த்ர ஸ்வரூபமான சித்ரகுப்தவித்யை நமது கருவிகரணங்களைப் பிரகாசிக்கச் செய்கிறது என்பது இதன் கருத்து. அப்படியே யந்த்ரபூஜைக்கும் யந்த்ரசித்திக்கும் அமையும்.

இப்படியாகத் தந்த்ர மந்த்ர யந்த்ரங்களெல்லாம் "ஆதியாய்நின்ற அறிவு" ஒன்றின் "ஆபாஸமாக" (பிரதிபிம்பரூபமாய்) உற்பத்தியாக, அந்த "ஆதி"யிலிருந்துண்டான முதல் வியாதி "பிறப்பு" என்றுசொல்லும் தீராப் பிணியாம்.

"பரமாய சக்தியுட் பஞ்சமா பூதந்
தாமாதிற் றோன்றும் பிறப்பு."

என்னும் குறளடியால் ஔவையார் ஆதியிலிருந்துண்டாகும் முதல் வியாதியைச் சொன்னார்.

"ஓசைபரிச முருவஞ் சுவை நாற்றம்
ஆசை படுத்து மளறு."

ஆதியாய் நின்ற அறிவிலிருந்து இச்சாமாத்திரத்தாலுண்டான "பரமாய சக்தியிலிருந்து குணபேதத்தால் 'பஞ்சமாபூத' ஸ்வரூப பஞ்ச கிருத்தியங்களுண்டாக, அதனல்பிறப்பும், அந்தப் பிறப்பிலிருந்து கர்த்தா போக்தா வென்கிற எண்ணத்துக் கிருப்பிடமாகிற "நான்" என்னும் அஹம்பாவ "ஆசை" யுண்டாக, அந்த "ஆசை"யானது பிறப்பென்னும் "ஆவரணம் மூடிய அறிவை" சப்த, ஸ்பரிச, ரூப, ரஸ, கந்தம் என்கிற பஞ்சதன்மாத்ராவிஷயமாம் "சேற்றில்" அழுத்திவிடுகிறது. இந்த அவஸரத்திலே உருவமேற்பட்டு உபாதியுமேற்பட்டுப் போய் விடுவதால், "சிதாபாஸனுன" ஜீவன், புருஷார்த்தங்களைத் தேடியலைகிறுன்.

"தருமம் பொருள்காமம் வீடெனு நான்கும்
உருவத்தா லாய பயன்."

இனி பஞ்சீகரண விதியால் "சிவமூர்த்தி யைந்தும்" "திகழ்சத்தியாறும்" "தாதுக்களேழும்" "அஷ்ட மூர்த்தங்களும்" உண்டாகி ஸம்ஸாரவிருக்ஷம் முளைத்துக்கிளைத்து பலத்துப் பூத்துக் காய்த்துப் பழுத்து "விந்து" வெனும் வித்து விட்டு நிற்கிறது.

"இவையெல்லாங் கூடி யுடம்பாய வொன்றி
னவையெல்லா மானது வித்து."

விந்துவாகிய இந்த வித்திலிருந்து பின்னும் பிறப்பாகிய விருக்ஷம் முளைத்துக் கிளைத்து வளர்ந்து "உடம்பாய வொன்று" ஆகிறது.

இப்படி "ஆதியாய் நின்ற அறிவு" தனில் வசிக்காநின்ற பரமாய சத்தியுட் பிறப்புத் தோன்ற, அது "உடம்பாய வொன்ருகி" அந்த உடம்பின் தத்துவங்களெல்லாம் சேர்ந்து "விந்து" வாகி, அதுவே பின்னும் பிறப்புக்கு வித்தாயிருக்கிறது.

"உடம்பாழிந்தால் உயிராழிவார்" என்னும் திருமந்திரப்படி, உடம்பழிந்தால் உயிரழியும். ஆனல் உடம்பழியின் அது விந்துவாதலாலும், விந்து வென்பது மரத்தின் வித்துப்போல "உடம்பாய வொன்றினவை யெல்லா

மானதா” யிருப்பதாலும், விந்துநாசத்தாலன்றி உடம்பு அழியாது. விந்துவுக்கு நாதத்தில் ஒடுக்கமானதால், “அழியாதிவ்வுடலங்காண் நாதபிந்து சேர்ந்தால்” என்ற மூதுரைப்படி, அது நித்திய தத்துவமாகிறது. “தனையாய்த்திருப்பது தத்துவந்தானே” என்ற திருமந்திரப்படி அந்த அழியாத தன்னை யாய் திருப்பது “தத்துவம்”—தத்பத, துவம்பத லக்ஷியார்த்தங்களாகிய பிரஹ்மாத்மஐக்கியத்தைக்குறிக்குமோர் நித்திய வஸ்துவாம்.

“தத்துவ மெங்குண்டு தத்துவ னங்குண்டு” என்ற திருமந்திரோபதேசத்தால், ப்ரஹ்மாத்ம ஐக்கிய ஸ்வரூபமாகிய ஸ்ரீசக்ரம் என்னும் காரணதேஹத்தில் தத்துவகாரணனை தத்துவனை [கடவுளைக்] காணலாம். தத்துவங்களெல்லாம் கடந்தவனாதலால் அவனுக்குக் கடவுள் என்னும் திருநாமமமைந்தது.

“அறிவார் பராசக்தி யானந்தமென்பர்
அறிவார் அறிவுரு வாமவளென்பர்
அறிவார் கரும மவளிச்சை யென்பர்
அறிவார் பரனு மவளிடந்தானே”.

என்னும் திருமந்திரோபதேசத்தால், பிரஹ்மாத்ம ஐக்கிய ஸ்வரூபமான “ஆனந்தமே பராசக்தி” யென்று ஞானமூர்த்திகளான பெரியோர் சொல்வர். “ஆதியாய் நின்ற அறிவு” என்ற ஔவையார் வாக்கியத்தால் அவள் “அறிவுருவா” யமர்ந்துள்ளாளென்றதும் பிரசித்தம். பிறப்பு முதலான ஸம்ஸார விருக்ஷம் அவளுடைய சக்தியினாலேயே யுண்டாவதால் “கருமமவளிச்சை’ யென்றார். தத்துவமாயுள்ள அவளுக்குள்ளே தத்துவனான கடவுளிருப்பதால் “பரனுமவளிடந்தானே” என்றார். காரியவாதிகளான நவீன நாகரிகப்புஞ்சங்கள் இவையெல்லாம் தெரிந்து என்னத்திற்குப் பிரயோசனமென்பர். யாவத் பிரயோசனமும் இதனாலேயேயென்று இதிஹாஸபூர்வமாய்க் காட்டுவோம்.

கைலையங்கிரியில் ஸ்ரீசங்கரரோடு அர்த்தநாரீசுவரியாயமைந் திருப்பவர் “பரமாயசக்தி” யென்றுசொல்லிய பராசக்தி. அந்தப்பராசக்தி தானே “உடம்பாயவொன்று” ஆனால் அவளுக்கு “சங்கரபார்வதி” யென்றுபேர். அப்படியென்றால் “நன்மையையே செய்பவளான பர்வதராஜபுத்ரி” யென்பது வாச்சியார்த்தமாம்.

இங்கே லக்ஷியார்த்தம் கூறில்,—

“நன்மை” யென்பதற்கு லக்ஷியார்த்தம் “பரசிவம்”. அப்பரசிவத்தைக் காட்டிக்கொடுப்பதாம் தொழிலையே “செய்பவள்” என்னும் வாச்சியார்த்தத்திற்கு லக்ஷியார்த்தம் பராசக்தி. இது காரணாதீதமான கலாதீதத்தில் பொருந்தும். ஸ்தூலபாவத்தில், அந்த “நன்மையே செய்பவள்” ‘பர்வதராஜன்” என்னும் “தாணு”வில் சிரேஷ்டமான ஒன்றினின்றும், “புத்ரி”—“பிறப்பு மார்க்கமாய்த் தோன்றினவள், அதாவது “உடம்பு”.

ஆகையால் “சங்கரபார்வதி” யென்னும் சப்தம் மாயாஸஹிதமார்ஜாலதேஹமாம் மனதோடுகூடியவுடம்பில் வசிப்பவளான “தேஹி’ யைக் குறிக்கும்.

இந்த சங்கரபார்வதிக்கு ஒருநாள் ஒருயுக்தி தோன்றியது. பகவான் க்ஷீராப்தியைக்கடைந்தகாலத்தில்வாஸுகி கக்கிய ஆலகாலவிஷத்தை உலகரக்ஷணார்த்தம் கையில்திரட்டி ஆசமநம் பண்ணி, விஷதாபத்தால் சோர்ந்தவர்போல் திருவுருச்சாய்ந்து மூர்ச்சையாக, கூடவிருந்த உமையம்மையையும் சகலமானதேவர்களையும் ஏகாதசியன்று அல்லும்பகலும் ஆசமநீயதீர்த்தமுமருந்த வாய்க்காமல் செய்து, பகவான் மூர்ச்சைதெளியுமாறு தேவி சிசுருஷைசெய்துகொண்டு இரவிற்கண்கொட்டாது விழித்திருந்தனராதலால், அந்த ஞாபகம் மனதிலுதிக்க இந்தக்கலிகாலத்தில், பகவானையப்படி எய்க்க வேண்டுமென்று நினைத்து நரவுருத் தரித்து

நாரியாய்த்தோன்றி, பகவான் அந்தர்யாமியாய் வந்தவதரிக்கும் தருணம்பார்த்திருந்து கன்னி வடிவாய் அவரைக் கடிமணஞ்செய்து, தன் மாயையைக்கொண்டு மார்ஜாலவித்யையெல்லாம் காட்டிவந்தாள்.

புருஷனையடைந்து ஸ்ரீபுமான்களாக வாழும் பொழுதும் தன் மார்ஜால வித்யையைக் காட்டி, மதனலீலையிலும் மாயபோகமேயளித்துவந்தாள். அந்தர்யாமியான சிவபெருமான் "மாயைவென்றவள்" போகம் துய்த்தும் துய்க்காது யோகமியற்றிப், "பந்தம்பறி" யுற்சவ லீலையினுண்மையையுணர்ந்து, தன்னந்தனியனாய்த் தற்பரமேயானவனாய்த் தர்மஸம்வர்த்தனியைக்குறித்துத் தபவிருந்து அவளுடைய தரிசனவிசேஷத்தால், அவளைக்கண்ட அந்த அவசரத்தில் தானே திருமணம் புரிந்து சதி பதிதர்மம் சிதறாது இல்லறம் நடத்திவருகையில், சுந்தரமூர்த்தியாம் திருவருட்குழவியின் மத்தியஸ்த விசேஷத்தால் மனக்கிலேசந்தீர்ந்த பார்வதி, பதியை யடைந்தும் சதிமோசனைவிட்டிலளாகி, கரபாத்திரதாரியாம் புருஷனுக்குத் தான் என்னவஞ்சனைசெய்தும் அதுபலிக்காது அவன் நித்தியதிருப்தனா யிருப்பதைக்கண்டு பொறாதவளாகித் தன்னைப்பெற்ற ஆத்தாளுக்கு மூத்தாளோடுகலந்து ஒரு சூழ்வினை செய்யலானாள்.

கலியுகத்தில் உண்டிசுருங்கில் உடல்சுருங்குமென்பதை யுணர்ந்து, உண்டியைச்சுருக்கித் தன்னுடலையுலர்த்தி உதிராக்கினியைக்கொண்டு ஜாடராக்னியை மூட்டி ஜ்வரத்தீயை வளர்த்தாள். வியாதிகளுக்கெல்லாம் வித்தான ஜ்வரமெனும் அந்த யாகத்தீயில்,

"தொக்குதிரத் தோமேன் மூளைநிண
மென்பு சுக்கிலந் தாதுக ளேழு".

என்று ஔவையார் கூறிய சப்ததாதுக்களையும் யஜ்ஞம் செய்வான் விகற்பவாதனையால் தனக்கியல்பாயமைந்ததோர் சதிதர்மத்தைப் "பதி வஞ்சனைக்கென்றே" பாரிலுபயோகித்தாள். "தொக்குதிரத் தோமேன் மூளைநிண மென்பு" என்ற தொடக்கத்தில் தோலுமென்புந்தவிரமற்றைத்தாதுக்களையெல்லாம் "ஆகாதயஜ்ஞமாம்" அந்த அக்னிகுண்டத்தில் தாக்ஷாயணியைப் போலவே, அவள் எண்ணத்துக்கு மாறாகத் தியாகஞ்செய்து விட்டாள்.

புருஷஸ்வரூபமான சங்கரனும் பார்த்தார் :

"பழிபாவத்துக்கஞ்சாப் பாவியென்றுன்னிபவ
ளிழிபாவத்துக்கேற்ற வழியொன்றுதேடலுற்றார்:
கழிபெருங்கண்ணோட்டத்தாலுருகி யமிழ்தேயாகிப்
பழியஞ்சாப் பெண்ணுக் குற்றதோர் மருந்தானார்.

"மருந்தும் பலித்தது மாயமும் வெளியாச்சு
அருந்தும் சுவையது கைப்பாலே குணமாச்சு
அருந்தவமில்லா விருந்துண்ணும் பூச்சிகள்
இருந்துண்ண மாட்டாமல் மாய்ந்துவிழுந்தன."

"விழுந்தன பூச்சிகள் விஷமங்கள் வெளியாக
அழுந்தின ஜ்வரதாபம் அடியற்று விழலாச்சு
உழுந்துழுந்தாகவே யுள்மலம் வெளியாச்சு
எழுந்துநடக்கவே ரஸவாதந்தானுச்சு."

"பராசக்தி" பார்வதியாம் நரசரீரமானாற்போல் 'உள்மல நீலமும்' (ஸ்தூலதத்துவங்களொடுங்கும் வாயுவாம் நீலவர்ண உள்மலம்) உழுந்துபோல் கறுப்பாச்சு.

ஆதி வியாதிகளெல்லாம் பிறப்பிறப்பென்னுமோர் துவந்துவத்தில் அடங்கும். "துவந்துவ ஜ்வரம்" வந்ததானால் கெந்தகக் கசப்பதில்போகாதென்றார்! பிறப்பிறப்பாம் ஆதிவியாதிக்கு உப்பின் கைப்பதோ மருந்தாகும்! "கைப்பல்லோ உப்பிலிருந் துன்னைக் கொல்வது!" என்றார் ஞானவெட்டிபாடிய வள்ளுவசித்தரும். ஆகையால் உப்பிலுள்ள [தேஹத்திலுள்ள] கைப்பைப்போக்கக் கைப்பையே உபயோகிக்கவேண்டும்.

"கைப்பாலே கைப்பென்னும் மாய்ப்புப்போனால்
கைப்பெல்லாம் மாய்ப்பில்லா மதுரமாகும்."

என்பது சித்தர் அனுபோக முறையாதலால், உப்பிலுள்ள கைப்புக்கொப்பான தேஹத்தி லுள்ள அசுத்தமனமாம் கைப்புப்போக, அசுத் தரூபத்தால் கைப்புமயமான "ஆத்மதத்துவத் தைக்"கொண்டு அசுத்த மனங்காரணமாகவுண் டாகும் "கைப்பென்னும மாய்ப்பு"ப்போனல், பின்னர் ஜநநபரம்பரையாகவரும் மரணரூபக் "கைப்பெல்லாம்" அசுத்தமனத்தோடு அசுத் தவாசனையு மற்றுப்போன காரணத்தால், "மாய்ப்பில்லா மதுரமாகும்." அப்படியென்றால் இறவாப்பிறவியாம் ஜீவன்முக்தி பதத்தை யளிக்கும். திருமூலதேவரும்,

> "மனமாயைமாயை யிம்மாயை மயக்க
> மனமாயைதான் மாயு மற்றொன்று மில்லை"

யென்றோதி யிருக்கிறாரல்லவா? மனமாயை மாய்ந்தால், பிறகு மாயவேண்டிய தொன்று மில்லையாதலால் "பினைமாய்வதில்லை" யென் றும், நித்தமுத்த நிர்மலசுத்தமான ஆத்மதரி சனங் கிடைத்தபின் "பிறப்பிறப் பென்னும் பேச்சு "பிதற்றலே" யாகுமாதலால் "பிதற்ற வும் வேண்டா"மென்றும் சொன்னர். காரண ஸ்வரூபியான தன்னையாய்ந்து ஓய்ந்து "சும்மா விருக்கச் சுகம் சுகமென்றோதும் மறையெல் லாம்" ஆதலால் உபசாந்திபெற்றுச் சும்மா "இருப்பது" தத்துவந்தானே"—"பிரஹ்மாத் மைக்கிய ஸ்வரூபத்தை" விளக்கும், "சிவசக் தியைக்கிய ஸ்வரூபிணி"யாம் "ஸ்ரீசக்ரராஜா" அதுவே யென்று ஓதினர். இந்த உண்மையை லக்ஷிய லக்ஷணவிதியை யனுசரித்துக் காரண காரிய முறையினனே தாபத்திரியங்களும் நிறைந்த ஸம்ஸாரஜ்வரம் முதலாக தேஹத்திரி யங்களை வாதிக்கும் ஆதி—வியாதி சம்பந்தமான ஜ்வரமீறாக எல்லாவற்றிற்கும் பிரயோகமுறை யாலே உபயோகிக்கலாம்.

இதற்கு மந்திர தந்திர யந்திரஸ்வரூப ஞான மும், தாரணை தியான சமாதி பொருந்திய யோக-ஸம்பம சித்தியும் இன்றியமையாச் சாத னங்களாம். இவை யிருக்கின்' பிரயோகமுறை தானே தோன்றும். சாதகர்களுக் குதவியாகப் பெரியோர் மஹாமந்திரங்களுக்கு தியானலக்ஷ ணமும் பிரயோக விதியும் யந்திர நிர்மாணமும் அதிசூக்ஷ்மமாக அவர்களது காருண்ய விசே ஷத்தால் உணர்ந்து குறித்து வைத்திருக்கிறார் கள். இதை காசுபறிக்க உபயோகிக்கிறவர்கள், காசுவாங்குவதனுலல்ல, காசாசைக் கிடங்கொடு க்கும் அசுத்தமனம் உள்ளே யிருப்பதின் கார ணமாக அனேக ஆபத்து விபத்துக்களுக்காளா கிறார்கள். இவர்கள் தண்ணீரிலுள்ள முதலை யைக் கண்டஞ்சியோடி நிலத்திலுள்ள காடி யைக் கட்டிக் கொண்டவர்களுக்கு சமானமாவா ர்களென்று எம்பெருமான் திருமூலநாயனர் திருமந்திர மோதியிருக்கிறார்.

## Stilt-Walking in Excelsis.

## "பொய்க்கால் நடைமலிப் போலியர் உயர்வு."

"You are down and therefore we kick you"—
the Social Stilt-Walker.

"பொய்க்கால்" என்றால் என்ன? சிறுவர்கள் தாம் சிறுவுருக்கொண்டும் பெரியவர்களாகத் தோற்றவேண்டுமென்று மூங்கில் மரம் இவை களால் போலிக்கால் செய்து அதுமேலேறிக் கொண்டு தத்தித்தத்தி நடப்பதுண்டு. அச் சிறுவர்கள் தங்களை உயர்த்திக் கொள்ள உப யோகிக்கும் மரம் அல்லது மூங்கிலாலாகிய போலிக்காலுக்கு "பொய்க்கால்" என்று பெயர்.

பொய்க்காலூர்ந்து போலிநடை நடந்து தன்னை உயர்த்திக்காட்டிக் கொள்ளும் சிறு வர்களைப்போல், பொய்மலியுலகில் பொய்பிர வல் வாங்கிப் பொய்மதம்பேசிப் போலி பாவ னையால் தன்னையுயர்த்திக் கொள்ளும் தன்மை வாய்ந்த போலிமனிதர்கள் எத்தனையோ பேர்

களிருக்கிறார்கள். என்தாய் உண்மையுபதேசம் செய்யுங்கால், "உலகமே பொய்யாக (நித்தியமில்லாமல் மாறிக்கொண்டிருக்க,) அதிலும், இரவல் பொய் வாங்கிப்புளுகும் போக்கிலிப் புளுகர் எத்தனையோபேர்" என்று சொல்லி தம் முன்வரும் போலிமனிதர்களது பொய்க்காலைப் பிடித்திழுத்து அவர்கள் 'உயர்-பாவங்களை' யெல்லாம் அக்கக்காக வெடுத்துப் பிரித்துக் காட்டிப் புல்லியர் சேர்க்கையைக் பொய்யெனத்தள்ளும் வழியுரைப்பாள். அப்பொழுது அவள் சொல்லியதெல்லாம் ஏதோ புதுமையாக விருந்தது. இப்பொழுது மனிதர்களுடைய குணமும் மணமும் காணக் கண் படைத்த காரணத்தால் அவள் சொன்னது அவ்வளவும் உண்மையாயிருக்கக்கண்டு அதிசயிக்கிறோம்.

பொய்மதம்பேசிப் 'பெரியதனம்' பாராட்டும் போலியர் பலரையும் வர்ணித்துரைக்க வாயிடங்கொடாது. ஆயினும் சிறிது சொல்லாமற் சொல்லிச் சுட்டிக்காட்டுவோம். "பெரியதனம்" குணத்தாற் பெரியவர் தன்மையைக் குறிக்கும். அவரே மணத்தாற் பெரியவருமாவர். ஆனால் இங்கே பெரியதனம் பாராட்டும் போலியர் நடிப்பைக்குறிக்க அப்பதம் உபயோகிக்கப்படும் பொழுது, அவர்கள் "பொய் பாவனை" அல்லது "வீண் பாவனை" யென்கிற "பொய்க்காலேறிப்" போலி நடை நடக்கும் நடிப்பைக் குறிப்பதாகும். இப்படியாகவுள்ள 'பெரியதனக்காரர்' பலவகையாவார். அவர்களிற் சில்லரையான வகுப்பார் சிலரைக்கீழே குறித்துச் சாட்டுவோம்:—

(1) "ஊரிற்பெரியவர்"—எனநடிக்க விரும்புவோர், ஊருக் குழைக்கிறதாக பாவனைகாட்டித் தன்னயமொன்றே கண்ணாயிருந்து தருமாதருமமிரண்டும் விட்டு, ஊரைக்கெடுக்கு முபாயமுணர்ந்தே தம் பேரைக்கொடுத்துப் பெருவாழ் வெய்துவர். இவர்களுடைய எண்ணம் பலித்தக்கால், "அற்பனுக்குப் பவுஷ் வந்த" மாதிரி இவர்கள் தம் பெருமையைச் சிறியார் பெரியார் எல்லாரிடத்தும் சிறுமைப்படக்காட்டிப் பெருமைப்படுவர். இந்த வீண்பெருமை பாராட்டுவதானது அற்பன் "அர்த்தராத்திரியில் குடைபிடி"ப்பதிலும் வேடிக்கையாகவிருக்கும். "ஊரெல்லாம் வாழக் கேடொன்றுமில்லை" யென்கிற பழமொழி இவர்களுக்குத் தலைகீழாகப்பாடம். ஊரெலாங்கெடினும் தான்வாழவே பார்ப்பர். "பாழும் ஊருக்கு நரி ராஜா" என்கிற மாதிரி இவர்கள் தருமாதருமங்களை யெல்லாம் பிரஜைகள் மனதில் பாழ்படச்செய்துவிட்டு, அப்படிப்பாழ்பட்ட மனத்தர் தம் புகழைத்தேடிப் பிரலாபம் சம்பாதித்துக்கொண்டு மகிழ்வர். இதுவு மொருவாழ்வு! இப்பொய் வாழ்வு எத்தனைகாலம்நிலைக்குமென்று ஓராது, உணராது, தேறா மனத்தராய்த் தயங்கித்திரிவார்கள். ஆயினும் ஊருக்குப் பெரியவன் நானிருக்க யாரடா வாயைத்திறக்கிறவனென்று சண்டைக்குப் புறப்படுவர்.

(2) "பேரிற்பெரியவர்".—ஊரிற்பெரிய போலியருக்குப்பின் "பேரிற்பெரிய" போலியர் நடை மிக நகைக்கத்தக்கதாம். "பசுவைக்கொன்று செருப்புதானம் செய்த" புண்ணியவானைப் போல, இவர் தருமசொத்தைக் கொள்ளையிட்டு தண்ணீர்ப்பந்தல் தருமம் செய்வர். பேரும் புகழும் கிடைத்தால் போதும். நல்லது பொல்லாது என்கிற வியவஸ்தை கிடையாது. ஊரெலாம் தன்பேர் கல்லிலாயினும் கட்டடத்தாயினும், பத்திரிகையிலானும் வேறு எத்தனைக வழியிலாயினும் விளங்கினாற் போதும். புகழ்ச்சிக்கும் இகழ்ச்சிக்கும் இவர்கள் வித்தியாசமறியார். எப்படியாவது தன்பேர் ஊரார் வாயில் பட்டு அடிபட்டால்போதும்; பேரைக்கொண்டே யிவர் பிரசித்தி யடைவர். பட்டம் வாங்கப் படாதபாடெல்லாம் படுவர். நல்லதும் பொல்லாதும் நனிமிகச்சொல்லி எல்லாவற்றானும் தம் பேரையே பெரிதாய் வெளியிடப் பார்

ப்பர். நன்மையேசெய்ய ஆற்றலரேனும் தீமையே புரிந்து தம் பேரை வளர்ப்பர். உண்மைக் கீர்த்தியை உணராப் போலியர் அண்மைப் பேரை அருமையாவளர்ப்பர். தொட்டிவிட்ட பாட்டி யிட்டதோர் பேரை பொட்டியொட்டிப் பலபட்டங்களைச் சேர்த்து வட்டிக்கிட்ட பணம்போல் பேரை வளர்ப்பர். பேர்ற்பெரிய போலியராம் பேதைகள் ஊரைக் கெடுத்தேனும் பேரை வளர்ப்பர்.

(3) "பணத்தாற் பெரியர்."—மூன்றாவதான பெரியதனக்காரர் எவரெனக் கேட்கின், "பணத்தாற் பெரியவர்." "பணத்தாற்பெரியவர் பிணத்திலுங் கடையர்." எப்படியெனிலோ இயம்பக் கேண்மின். ஊர், பேர், இரண்டிலும் பெரியனாம் போலியன் இகத்துள கீர்த்தி பொன்றையே விற்பன். பரம் எனும் பதத்தைப் பகுத்துணர் அறிவிலன். பணமே பெரிதாய்க் கொண்டதோர் பொய்யனே அண்டபிண்ட மிரண்டையுமொன்றாய் விற்றேவிடுவன். பணத்தாற் பெரியவன் பணமே சேர்ப்பன்; தன்னை விற்றாயினும் பணமே சேர்ப்பன். பணம் சேர்ப்பதுவே குணமெனக்கொள்வன்; (அவனுக்கு) பணம் குணமிரண்டும் பேதமில் பொருள்களாம். பணமில்லாக் குணமவற்குப் பிணத்திலுங் கேடாம். பணம்பணமென்றவன் பணத்தைச் சேர்த்துப் பணக்குவியல்தனைப் பெருக்கவே பார்ப்பன். தான தருமங்கள் செய்பவன் போலவன் போட்ட பணத்தை மீட்டும் பன்மடங்கதிகமா யெடுக்கும் வகையையே பார்ப்பன். அறம்பொருளின்பமூன்றுமவற்குப் பணமொன்றினிலே பதிந்து கிடக்கும். பிணமதுதானும் அதன் குணத்தைக் காட்டிப் பல்லார் அறிந்து அதையொதுக்கச் செய்யும்; பணவாசைகொண்ட போலிமனிதன் நடைப்பிணமாகியும் அவன் குணத்தைக் காட்டியொதுக்கச்செய்யான். மாயாவேஷங்கள் பலவுங் கற்றுப் பேய்போல் பணத்தில் ஆசையைவைத்து, இகபரமிரண்டையும் விற்றதைச் சேர்ப்பன். பணத்தாற்பெரியனும் போலிமனிதன் குணக்கேட்டிற்கெலா மிருப்பிடமாவன். கடவுளையுங் கூடுமானால் அவன் விலைக்கு வாங்கி வட்டிமேற்போட்டு வியாபாரஞ் செய்வன். பாணாசுரனிலும் மிகக் கோணாசுரன் அவன்! கோவணமொன்றேயன்றிக் குறிக்குமோர் பண்டஞ்சேரார், கரபாத்திரந்தானேயாகிக் கடவுளைத்துதிக்கும்சித்தர், ருணமாத்திரமேயாகிக் குணமிலாப்பணப்பேயாகும் புல்லியர் தம்பால் பிச்சையேற்கவும் பொறுக்கார் அம்மா! பரம்பொருளொன்றே பொருள் (லக்ஷியம்) அன்றி மற்றவா யுள்ள பார்முதற்பூதமா மெல்லாவற்றையும் பொருளாவெண்ணாது, கரபாத்திரமாய்த் தாமுண்பதும் அப்பொருள் பற்றியேயன்றி வேறு நிமித்தமில்லாத வீராதிவீரரும் தீராதிதீரருமானசித்தர்களும் பணக்காரனிடம்போய் பல்லிளித்து நிற்பதைப் பொறுக்காமல் தம் இஷ்டதேவதையை நொந்து கொண்டு பாடியிருக்கிறார்களென்றால், மற்றவர்களுக்குக் கேட்பானேன்!

"புல்லரிடத்திற்போய் பொருள்தனக்குக்கையேந்தி
பல்லைமிகக்காட்டிப் பறக்க விழிக்கிறேன்'டி!
பல்லை மிகக்காட்டாமல் பறக்கவிழிக்காமல்
புல்லரிடம் போகாமல் என்கண்ணம்மா!
பொருளெனக்குத் தாராயோ!"

என்பது சித்தர்வாய்ப் பிறந்ததோர் பாடல்.

அகண்ட பரிபூரணமே லக்ஷியமாய்க் கொண்ட மஹாசித்தரும் கரபாத்திரமேற்று அவ்வகண்டலக்ஷியத்தையே வளர்ப்பர். புல்லரிடமேற்ற பிச்சைதானும் புன்மைநிறைந்ததால், அகண்டலக்ஷியத்தை வளர்க்கக் கையேந்திப உணவுபொருள் தானும் கொடுப்பான் சிந்தையின் கொடுமையால் கண்டதுண்டமாவது கண்டு உண்டதோர் உணவுபொருள் தானும் அகண்டலக்ஷியத்தை வளர்க்காமல், கண்டதுண்டமான பேதபாவனையாலீந்த பொருளாதலால் அந்தபேதபாவனையையே யுண்டு பண்ணுவதால் "ஐயோ! இதென்ன கூத்து!" என்று திரிபுரமுந் தஹனமாகச் சிரித்து (பல்லைமிகக் காட்டி), அந்தபேத

பாவனையெல்லாம் அற்றுப்போக—"பறக்க மிக விழிக்கிறேன்டி' யென்று தம் இஷ்டதேவதையாம் சித்சக்தியிடம் முறையிடுகிறார்! பணத்தாற் பெரிய பாதகன் (Mammonite) முன்னே, குணத்தாற் பெரிய சித்தரும் குன்றி நிற்பாரென்றால், சாதகபுருஷர்கள் படும் பாட்டுக்குக் கேட்பானேன்! ஆகையால் சின்மயானந்த ஸ்வரூபியாகிய "என்கண்ணம்மா!" "பல்லை மிகக் காட்டாமல் பறக்க விழிக்காமல்"—கரபாத்திர பிச்சையெடுப்பதிலுமுள்ள இந்த உபாதிதானும் நீங்கப்பெற்று, அகண்டலக்ஷிய சாதன முங்கடந்து சென்ற சகஜசமாதியினால் "புல்லரிடம் போகாமல்" அகண்டலக்ஷியார்த்தமான "பொருளெனக்குத்தாராயோ!" என்று பிரலாபித்துக் கேட்கலானார். அவ்விண்ணப்பத்தி லீடுபட்டு வீடுபெறப் பறக்கு மிவ்வேழைக்கு மேலொன்றும் தோன்றவில்லை. தோன்றாமையால், தோன்றாமை தோன்ற எழுதவும் கூடவில்லை.

ஓம் தத்ஸத்.

---

## Sivayoga-Deepika.
## Chapter III.
### (Second Part, Ashtangayoga Siddhi.)

ஓம் ஸ்ரீ சாவித்திரியை நம:

சிவயோக தீபிகையில்

## அஷ்டாங்க பூஜா அந்தரங்க சதுரங்க விதானமென்ற

மூன்றாவது படலம்.

(இரண்டாம் பாகம், அஷ்டாங்கயோக சித்தி.)

---

### தியானம்.

34. தேகமாகிய பாத்திரத்தில் விளங்கிக் கொண்டிருக்கும் ஞானமென்கிற அக்னியிலே பூத குணங்களென்ற தசாங்கத்தை மனோதாரணையினால் தூபமாகப்போடு. இது தியான லக்ஷணம்.

35. தியான மொன்றிலேயே சாதகனுடைய மனம் அதிக ஸ்திரமானால் அதுவே தாரணை யென்று சிவயோகிகள் சொல்வர். அது முன்னரே கிரமமாகச் சொல்லப்பட்ட போதிலும் இங்கு வேறு மாதிரியாக பூமி முதலியவைகளினிடம் தாரணைக் கிரமமாக வெவ்வேறாய்ச் சொல்வோம்.

36. அத்தாரணை யானது, தாரணீ (பூமி சம்பந்தமானது) என்றும், வாருணீ (ஜல சம்பந்தமானது) என்றும், ஆக்நேயீ (அக்னி சம்பந்தமானது) என்றும், மாருதீ (வாயு சம்பந்தமானது) என்றும், நபோமயீ (ஆகாச சம்பந்தமானது) என்றும் (இவ்வாறு) ஐந்து விதமாக வித்வான்களாற் சொல்லப்படும்.

37. ஆகையால் எப்போதும் அப்பியாசசூரர்களா யிருக்கிறவர்களுக்கு சர்வசித்திகளையுங் கொடுக்கிறபடியினால் யோகீசுவரர்களால் இவை தாரணை யெனப்படும்.

38. அதில் தாரணீயென்கிற தாரணைக்கு பாதம் முதல் முழங்கால்வரையுள்ளது பூசக்கிர ஸ்தானம் (பிருதிவீ ஸ்தானம்); அதில் லகார பீஜத்துடன் வாயுவை நிறுத்தி நாலு கைகளும் நாலு முகங்களுமுடைய பிரஹ்மாவை தாரணை பண்ணினால் பூமிஜய முண்டாகும்.

39. இரண்டாவதான வாருணீ யென்கிற தாரணைக்கு முழங்கால் முதற்கொண்டு நாபி பரியந்தம் ஜலசக்கிர ஸ்தானம். அதிலே வகார பீஜத்துடனே வாயுவை நிறுத்தி பீதாம்பரத்தை தரித்தவராயும், பிரசன்னமாகிய முகத்தை யுடையவராயும், சுத்தஸ்படிகவர்ணமுடையவராயும், சங்க சக்கரங்களைத் தரித்தவராயும், மன்மதன் பிதாவுமான ஸ்ரீ மகாவிஷ்ணுவை நமஸ்கரித்து தியானம் பண்ணினால் சீக்கிரமாக ஜலத்தின் ஜயமுண்டாகும்.

40. மூன்றாவதான ஆக்நேயீ என்கிற தாரணைக்கு நாபி முதற்கொண்டு கண்ட பரியந்தம்

அக்னி சக்ரஸ்தானம். அதிலே நகார பீஜத்துடன் வாயுவை நிறுத்தி மூன்று கண்கள், பிரசன்ன வதனம், அபயவரத ஹஸ்தங்கள், விபூதியானுத்தூளனஞ் செய்யப்பட்ட மேனி, இவைகளை யுடையவரும் சர்ந்தரும், பாலசூரியப் பிரகாசருமாகிய ருத்திரமூர்த்தியை நமஸ்கரித்து தாரணைபண்ணினால் அக்னி ஜெய முண்டாகும்.

41. நாலாவதான வாயவீ (மாருதீ) யென்கிற தாரணைக்கு கண்டமுதற்கொண்டு புருவமத்திய பரியந்தம் வாயு சக்ரஸ்தானம். இவ்விடத்தில் யகார பீஜத்தோடுகூட வாயுவை நிறுத்தி பிரகாசஸ்வரூபமாய் நிச்சல திவ்யதேஜஸோடு கூடின மஹேசுவரனைத் தியானம் பண்ணி தார்ணை செய்யுமவன் ஈசுவரனுடைய பிரசாதத்தால் (வாயு ஜயம் பெற்று) வாயுவைப்போல் சஞ்சரிக்கலாம்.

42. (ஐந்தாவதான நபோமயீ என்ற) தாரணைக்கு புருவ மத்திய முதற்கொண்டு லலாடமுடிவுபர்யந்தம் [1] ஆகாச சக்ர ஸ்தானமாகும். இவ்விடத்தில் ஹகார பீஜக்துடன் வாயுவை திட்டப்படுத்தி ஐந்துமுகமும, பத்துக்கைகளும், மூன்று கண்களும் சந்திரகலையாகிய கிரீடத்தைதரித்தவரும், ஆயுதங்களோடு கூடினவரும் இச்சித்ததற்குமேல் வரத்தைக் கொடுப்பவரும், எப்பொழுதும் அபயத்தோடு கூடினவரும் சகலதத்துவங்களுக்கெல்லாம் ஆதி தத்துவமானவரும், பிந்துவாகிய விபோம (ஆகாச) ஸ்வரூப மானவருமாகிய ஸ்ரீ கண்டசிவனை (சதாசிவத்தை) நமஸ்கரித்து ஏகாக்கிர மனத்துடன் தாரணை செய்பவன் முத்தியடைவான்.

43. இந்தப் பிரகாரம் ஐந்துதாரணைகளையும் ஒவ்வொன்றினுக்கு ஐந்து நாழிகை வீதம் அப்பியசிப்பவன் காயசித்தி [2] யடைவான்.

[1] சம்ஸ்கிருதத்தில் மயிரின்முடிவு பரியந்தம் என்பது பாடம்.

[2] காயசுத்தி யெனவும் பாடமுண்டு.

44. இவ்விதம் தாரணீமுதலிய பஞ்சதாரணைகளிலும் எப்பொழுதும் ஒருவன் பிராணனை நிறுத்துவானாகில் (வாத, பித்த, சிலேஷ்மமென்ற) மூன்று தோஷங்களாலுண்டாகிய பழைய ரோகங்களெல்லாம் சீக்கிரமாகவே நசிக்கும். இதிற் சந்தேக மில்லை.

45. ஞானத்தினாலாகிலும் [3] கர்மத்தினாலாகிலும் இந்த பஞ்சதாரணைகளும் எந்த யோகீசுவரர்களால் தரிக்கப்படுமோ [4] அவர்கள் எளிதில் சம்சாரமாகிய சாகரத்தைத் தாண்டுவார்கள்.

46. (இதுவரை தாரணைசொல்லி மேற் சமாதி கூறுகிறார்):—செவ்விய ஞானமாகிய தீபத்தை நிர்மலபுத்தி யென்கிற கையினாற் பிடித்து ஹிருதயமென்கிற ஆலயத்திற் பிரவேசிக்கச் செய்து, அஞ்ஞானமாகிய அந்தகாரத்தைப்போக்கி அங்கே விளங்குகிற பரமாத்மலிங்க மூர்த்தியை (மனோதிருஷ்டியாலே பார்த்து) ஸ்திரமான சமாதியினாலே உன்னுடைய ஜீவாத்மாவை யந்த பரமாத்ம லிங்கத்திற்கு நைவேத்தியம் பண்ணு.

47. உப்பும் நீரும் சேர்ந்து ஒன்றானாற்போல் மனதும் சத்ரூபமாகிய ஆத்மாவும் சேர்ந்து சமரசப் படுதலே சமாதியென யோகீந்திரர்களாற் சொல்லப்படும்.

48. எப்பொழுது ஜீவாத்மாவுக்கும் பரமாத்மாவுக்கும் ஐக்கிய முண்டாகுமோ அப்போது (சமஸ்த வஸ்துக்களுக்கும் மிஞ்சி) யோகீசுவரர்கள் சமாதி யவஸ்தையை அடைவர்.

[3] தியானத்தினாலாகிலும் எனவும் பாடமுண்டு.

[4] மூலத்தில் "எவரால் தரிக்கப்பட்டு அதன் அப்பியாசத்தில் ஊக்க முடையவர்களா யிருப்பார்களோ" என்று காணப்படும். வேறுபாடப்படி "எவரால் தரிக்கப்பட்டு சமரசபாவத்தில் ஊக்க முடையவர்களா யிருப்பார்களோ" என்றும் காணப்படும்.

49. இச்சமாதியால் யோகீசுவரர்களுடைய மனம் பரப்பிரஹ்மத்தில் லயிக்கவே அவர்களுக்கு சுரோத்திரம் முதலிய இந்திரியங்களும் சப்தாதி விஷயங்களும் அகங்காரமும், மனமும், மனோவிருத்திகளும், மான அவமானங்களும், சுகதுக்கங்களும், சீதோஷ்ணங்களும், புண்ய பாபங்களும், (இவை முதலிய) சங்கல்ப ஜாலங்களனைத்தும் இல்லை.

50. இவ்விதம் (பிரஹ்மத்தில் லீனமான மனத்தையுடைய) யோகீசுவரன் உத்தமமான ஆகாரத்தைப் புசித்தாலும் புசிப்பன்; ஆகாரஞ் செய்யாமலிருந்தாலுமிருப்பன்; நித்திரையோடு கூடியிருந்தாலு மிருப்பன், நித்திரையில்லாமலிருந்தாலு மிருப்பன்; குகையில் வாசஞ்செய்தாலும் செய்வன், சகல பூமியினும் சஞ்சரித்தாலும் சஞ்சரிப்பன்; அபேக்ஷையில்லாமலே நாநாவித கர்மகிரியைகளைச் செய்தாலும் செய்வன், நிஷ்கிரியனாயிருந்தாலுமிருப்பன்; இவ்விதம் நானாவித சேஷ்டைகளைப் பண்ணிக்கொண்டிருந்தும் சமாதியிற் சேர்ந்த மனம் சலியாமலிருப்பன். [இவனே அவதூதன் † என்கிற சப்தத்திற் குறித்தானவன்.]

51. இவ்விதம் அஷ்டாங்கங்களுடனேகூடிய ஹடயோகத்தை ஆலஸ்யமில்லாமல் அப்பியாசம் பண்ணி நிஷ்டாபரனான யோகிக்கு உண்டாகும் சித்திகளைச் சொல்வோம் கேள்.

52. (அப்படிக்கொத்த யோகீசுவரனுக்கு அப்பியாச காலத்தில் கிரமமாக) முதல்வருஷத்தில் சர்வரோகங்களும்போய் சர்வஜனப்பிரியனாவான். இரண்டாவது வருஷத்தில் தேவவாக்கினாலே சகல வித்யையும் சொல்வான். மூன்றாவது வருஷத்தில் சர்ப்பம் முதலிய வைகளாலவனுக்குப் பாதையில்லை.

† [“அவதூதன்” என்றால் உதறிவிட்டவன்-(விஷயபந்தங்களை) உதறி யெறிந்தவன் என்பது பொருள்-வி-சி-ப.]

53. நாலாவது வருஷத்தில் பசி தாகம் நித்திரை முதலியவைகளும், சீதோஷ்ணங்களுமவனுக்கில்லை. ஐந்தாவது வருஷத்தில் தூரசிரவணமும், வாக்கு சித்தியும், பரகாயப் பிரவேசமுமுண்டாகும்.

54. ஆறும் வருஷத்தில் வச்சிரம்[5]முதலான ஆயுதங்களால் பாதையில்லை; மிகுந்த வேகமும் தூரதரிசனமுமுண்டாகும். ஏழாவது வருஷத்தில் பூமியில் நில்லான் (தேவத்துவமடைவன்). எட்டாவது வருஷத்தில் அஷ்டைசுவரியமுமுண்டாகும்.

55. ஒன்பதாவது வருஷத்தில் தேகம் வச்சிரதேகமாய் ஆகாசகமனமும் சகலதிக்குகளிலும் சஞ்சாரமுமுண்டாகும். பத்தாவது வருஷத்தில் மனோவேகமாக நினைத்த விடத்திற்குச் செல்லலாம்.

56. பதினோராவது வருஷத்தில் (சர்வசராசரங்கள் தன்வசமான) சர்வஞ்ஞத்துவமும் சகல சித்திகளுமுண்டாகும். பனிரெண்டாம் வருஷத்தில் சாக்ஷாத் பரமேசுவரனுக்குச் சமானமாய்த்தானே சகல பிரபஞ்சத்தையும் சிருஷ்டிக்கவும் சம்ஹாரம்பண்ணவும் தக்கவனாவான்.

57. இப்படியாகப் பன்னிரண்டு வருஷம சத்குருவின் பாதங்களில் பக்தியால் விக்னமில்லாமல் அப்பியாசம்செய்த யோகி திடமாய் ஆத்மாவை யடைந்தவனாய் சித்தனாவான் என்றறியவும்.

58. ஆகையினாலே மகாச்சரியமான சிவ பூஜாங்கமான இந்த அஷ்டாங்கயோகத்தை நீயுமப்பியாசஞ்செய்.

59. இவ்விதம் நிரந்தரம் அப்பியாசம்செய்வதால், ஜனனமரணமற்றவனாய் தேகமுள்ளபரியந்தம் லோகத்தில் இச்சைப்படி (ஜீவன் முக்தனாய் )இருந்து, பின்பு விதேகமுக்தியை யடைவன்.

5 சஸ்திரம் எனவும் பாடமுண்டு.

60. இயமம், நியமம் இவை இரண்டை மாத்திரமே ஆசரித்தபடியினற்றனே சிவபக்தனென்றுசொல்லப்படுவன். சித்தாசன [6] அப்பியாசம் பண்ணினவன் மஹேசுவரபதத்தை யடைவன்.

61. சராசரங்களுக் கெல்லாம் லயஸ்தானமான லிங்கமாகிய ஆகாசமென்று சொல்லப்படும் ஸ்தானத்தில் பிராணவாயுவை கேவல கும்பகத்தால் லயிக்கப்பண்ணினவன் "பிராணலிங்கி" என்று சொல்லப்படுவன்.

62. பிரத்தியாகாரத்தோடு கூடினவன் சம்சயமின்றி "பிரசாதி ஸ்தலத்தை" யடைந்தவன். தியான தாரணைகளுடன் கூடினபுத்திமான் "சரணஸ்தலத்தை' யடைந்தவனுவான்.

63. நிச்சலமாகிய ஐக்கிய சமாதியால் லிங்கைக்கியமாகிய அத்வைதபாவத்தை யடைந்தவனுவன். இவ்விதம் அஷ்டாங்கயோக நிஷ்டனை யோகிசுவரன் வீரசைவனென்று சொல்லப்படுவான் [7].

64. ஆகையால் நீயும், ஓ சிஷ்யனே, கர்மயோகங்களினலேயாவது ஞானத்தாலாவது சர்வயத்தனங்களாலும் இந்த அஷ்டாங்கயோக மார்க்கத்தால் . சிவயோகியாவாயாக. (சிவயோகாப்பியாசம் செய்வாயாக).

இப்படி ஸ்ரீ சதாசிவ யோகிசுவரரால் செய்யப்பட்ட சிவயோகதீபிகையில் அஷ்டாங்க பூஜா அந்தரங்க சதுரங்க விதானமென்ற மூன்றும் படலம் முற்றும்.

மு. கோ. நாராயணஸ்வாமி ஐயர்.

---

[6] ஸ்திராசன மெனவும் பாடமுண்டு.

[7] இவ்விடத்தில் நூலாசிரியர் இவ்வஷ்டாங்க யோகத்தை யப்பியசிப்பவன் வீரசைவனுவா னென ச்சொல்லவிரும்பி, வீரசைவ சித்தாந்தத்தில் சிவபூஜாக்கிரமத்தில் உபாசகர்களடையும் ஷட்ஸ்தலங்களாகிய பக்தஸ்தலம், மஹேசுவரஸ்தலம், பிராணலிங்கிஸ்தலம், பிரசாதிஸ்தலம், சரணஸ்தலம், ஐக்கியஸ்தலம் என்ற ஆறு ஸ்தலங்களும் யோகத்தில் இயமம் முதல் சமாதி வரையிலுள்ள எட்டு அங்கங்களும் ஒன்றேயெனக் காட்டுகின்றார். இதை யொட்டி பழையமொழிபெயர்ப்பைத் திருத்தியிருக்கின்றோம். ஷட்ஸ்தலங்களின் விரிவை சித்தாந்தசிகாமணி, விசேஷார்த்தப்பிரகாசிகை, அநுபவசூத்திரம் முதலிய வீரசைவநூல்களில் பார்க்கலாம்.

## Kannaki—A Social Drama.

### கண்ணகி.

அங்கம்.III] [காட்சி-4.

இடம்—ஐயைகோட்டம்

காலம்—அந்திப்பொழுது

பாத்திரர்— கோவலன், கண்ணகி, கௌந்தி, சாலினி, மறவர்கள்.

**கண்ணகி**—நாதா! அந்த அந்தணர் சொன்ன வழியைப் பின்பற்றிக் கொண்டே நெடுந்தூரம் வந்துவிட்டோம்! (இளைப்போடு) உஸ்! ஆ! பிராணபதி! என் கால் நோவுகின்றதே! நாவு உலருகின்றதே! கண் சுழலுகின்றதே! காதலா! என்ன செய்வேன்! நாதா இதோ பார்த்தீர்களா; என்னுடைய கால்களில் கொப்புளங் கண்டிருக்கிறதே? (பாதத்தைக்காட்டுகிருள்). இனி என்றல் ஓரடிகூட எடுத்துவைக்க முடியாது! நின்றபடியே கோவலன் தோளின் மேல் சாய்கிருள்.)

**கோவலன்**:—(கண்ணகியைத் தன்தோளில் அணைத்துக்கொண்டு) மாசறுபொன்னே, வலம்புரிமுத்தே, காசறுவிரையே, கரும்பே, தேனே, அரும்பெறற்பாவாய், ஆருயிர்மருந்தே, பெருங்குடி வாணிகன் பெருமடமகளே, மலையிடைப்பிறவாமணியே, அலையிடைப்பிறவாஅமிழ்தே, யாழிடைப்பிறவா இசையே,நீயேன் வருந்துகின்றாய்? இனி நாம் நடக்கவேண்டுவதில்லை. இதோ ஐயைகோட்டத்தை நெருங்கிவிட்டோம். இன்றிரவை இங்கே கழித்துச்செல்லுவோம்.

**கௌந்தி**:—ஆம்; அம்மா! ஏனழுகின்றாய்? கஷ்டப்படவேண்டிய காலத்தில் கஷ்டப்பட்டுத்தானே தீரவேண்டும்! இன்னும் கொஞ்சதூரம்வா! (கண்ணகியை மெதுவாக அழைத்துச் செல்லுகிருள்).

**கோவலன்**:- அடிகாள்! இதோ ஐயைகோட்டம் வந்து விட்டோம்! (மூவரும் தங்குதல்.)

**ஒரு மறவன்**:—(மற்ற மறவர்களைப் பார்த்து) ஏ! அண்ணே! அங்கிட்டு பாத்தியா! சாலினிமேலே

காளிவந்து கூத்தாடு தாங்றேன்! ஏ! ஆத்தாடியோ! எம்பிட்டு சனங்கபோருவோ! வாண்ணு! நம்ளு போயிட்டு வருவோங்றே!

மற்றெருவன்:—ஆமாண்டோ ஆமா! சாலினி மயிரை விரிச்சுபோட்டுக் கிட்டு கூத்தாடுறாளாம்! அவளுக்கு ஒண்ணுமே தெரியலியாம்! எம்மிட்டு பேரு புடிச்சாலும் அடங்க மாட்டேங்கிறாளாம்டா!

வேறெருவன்:—ஆமா அண்ணே! யாருகடன் வச்சாலும் மாரிகடன் வச்சுக்கலாமா? சாமிக்கு பலி கிலி கொடுத்தால்ல? மாடு வெட்டி மாமாங்க மாச்சு தாம்! ஆடு கோழிகூட சாமிக்கி கொடுக்காயிட்டா அது கொவிச்சுக்காதா? நீதாஞ் சொல்லேன்!

இன்னெருவன்:—இங்கிட்டு எண்டாலே நிக்கி னும்! கிளம்புங்க அந்த வேடிக்கையெப் பாப்போம்! (இவர்கள் நால்வரும் வேறு சிலரும் சாலினி கூத் தாடும் இடத்தை நோக்கி ஓடுகிறார்கள்.)

கண்ணகி:—மணாளா! அதோ பாருங்கள்! ஏதோ ஒரு பெரிய வெளிச்சம் தோன்றுகிறது! மறவர்கள் அந்த வெளிச்சத்தை நோக்கி ஓடுகிறார்கள்!

கௌந்தி:—நாமிருக்கும் இடத்துக்கும் அந்த வெளிச்ச மிருக்கும் இடத்துக்கும் கூப்பிடு தூரம் கூட இராதென்றே நினைக்கிறேன்!

கோவலன்:—ஆனல் நாமும் சென்று அங்கு என்ன அதிசயம் நடக்கிறதென்பதைப் பார்த்து வரு வோமா?

கௌந்தி:—நீங்களிருவரும் சென்று பார்த்து வாருங்கள்! (இருவரும் போகிறார்கள்.)

சாலினி:—(தலைவிரி கோலமாய்க் கூத்தாடிக் கொண்டே) ஏ மறவர்களே! ஏ எயினர்களே! நீங் கள் எனக்குச் செலுத்த வேண்டிய கடனைச் செலுத் தாதலால் உங்களுடைய சேரிகள் பாழ்பட்டன. உங் கள் பகைவர்களுடைய ஊர்களில் பசுக்கூட்டங்கள் மிகுந்து போயின! வழி பறித்தடிப்பதாலும் சூறை யாடுவதாலும் வரும் வரும்படி உங்களுக்குக் குறை ந்து போயின! நீங்களும் உங்கள் கொலைத் தொழி லாகிய மறத்தொழிலை இயற்ற முடியாதவர்களாய் அறத்தொழில் செய்வோரைப்போலச் சினங்குறை ந்து செருக்கடங்கி விட்டீர்கள்! கள்வாடி மதுவுண்டு வாழும் உங்கள் வாழ்க்கையை விரும்பினல் எனக் குச் சேரவேண்டிய கடனைக் கொடுங்கள்! இல்லா விட்டால் உங்கள் குலத்தொழில் நாசமடையும்!

மறவர்கள்: (ஒரே கூச்சலாய்) தாயே பொறுத் துக்கோ! ஆமி பொறுத்துக்கோ! யென்னமோ தெரி ஞ்சுந் தெரியாமே சேஞ்ச பிழையை உன்னுடே மனசிலே வச்சுக்காதே! தாயே! இந்தத் தடவே மட்டும் மன்னுப்பு செஞ்சிக்கோ! உனக்கு வேணுங் கிறதெல்லாந் தாரோம்! (சுற்றிவந்து காலில் விழுகிறார் கள்.)

கோவலன்:—இதுவும் ஒரு வேடிக்கை தான்! (சிரிக்கிறான்)

கண்ணகி:—பிராணபதி! அதோ பாருங்கள்! அந்தச் சாலினிக்கு இவர்கள் என்னென்ன அலங் காரஞ் செய்கிறார்கள்! அவளுடைய கரிய கூந்தலைச் சடையாகக் கட்டி அந்த முடியிலே சிறிய வெள்ளிய பொன் ஞாண் வளையத்கிடத்தி, தோட்டப் பயிரை அழித்த பன்றிகளின் கொம்பைப் பிடுங்கி வெள்ளை நிறமுடைய பிறையென்று சொல்லும்படிச் சாத்தி அலங்கரிக்கிறார்கள்! புலிகளின் வாயைக் கிழித்து அவைகளின் பற்களை உதிர்த்து வரிசையாகக் கோர் த்து வைத்திருக்கும் வடத்தை நிரைத்தாலியாகக் கட்டுகிறார்கள்! புலியின் தோலை அவளுக்கு மேகலை யாக உடுத்துகிறார்கள்! இன்னும் நாதா! அதோ பாருங்கள்! வயிரவில்லை வருத்தத்தோடு வளைத்து அவள் கையில் கொடுத்திருக்கிறார்கள்! மதனப் பாவை, கிளி, சிறகின் மயிர், காட்டுக்கோழி, நீல நிறமுடைய மயில் முதலியவற்றைக் கொண்டு சேவித் துத் துதித்து நிற்கிறார்கள்! "வண்ணமுஞ் சுண்ண முந் தண்ணறுஞ் சாந்தமும், * நிணச்சோறும், பூவும் புகையுமேவிய விரையும்" கையிலேந்திக்கொண்டு ஏவற் பெண்கள் பின் செல்லுகிறார்கள்! வழிபறிக் கும் போது கொட்டும் பறையும், சூறைகொள்ளும் போது ஊதுஞ் சின்னமும், துத்தரிக்கொம்பும், குழிக்குழலும், இடைவிடாது ஒலித்துக்கொண்டிருக் கின்றன. உயிர்ப் பலியை யுண்ணும் விரிந்த பலி பீடத்தை முன்னதாகத் தொழுது பின்பு அவளைத் துதிக்கிறார்கள்! இவைகளை யெல்லாம் கவனிக்கும் போது, நாதா, உங்களுக்கு ஆச்சரிய முண்டாக

* நிணச்சோறு—இரத்தத்தோடு கலந்து பிசைந்த பலிச்சோறு.

வில்லையா? இப்படிப்பட்ட தெய்வ வழிபாட்டை நீங்கள் வேறு எங்காவது கண்டிருக்கிறீர்களா?

கோவலன்:—பிராண சகி! இந்தக் கூத்தும் காலக் கூத்துதான்! இந்த † மறவர்களுடைய ஈசுவர பக்தி எப்படிப்பட்ட தென்பதை இப்போது கண்கூடா யறிந்தோம்!

சாலினி:—(கண்ணகியைச் சுட்டிக்காட்டி) இவள் கொங்கு நாட்டினை யாளும் செல்வி! குட நாட்டினை யாளும் அரசி! தென்றமிழ் நாட்டினையாளும் பாவை! இவள் இப்படியாவதற்குக் காரணம் இவள் முன் ஜென்மத்தில் செய்த நல்ல தவமே யாகும்! இந்த உலகத்திற்கு முழுமாணிக்கம்போன்று உயர்ச்சி பெற்ற பெண்ணுருக் கொண்டதோர் திருமணி யாம் இந்தக் கண்ணகி! (என்று அங்கு கூடியிருந்த மறவர்களுக்குச் சொல்லுகிறாள்)

கண்ணகி:—(தன்னைப் புகழ்ந்து சாலினி கூறியதைப் பொறுது நாணினவளாய் தன் கணவன் பக்கத்தில் மறைந்துகொண்டு) நாதா! இவள் தெய்வ மயக்கத்தால் ஒன்று மறியாது மயங்கி என்னைப் புகழ்ந்து பேசுகிறாள்! இவளுடைய அறிவின்மையை என்னென்பேன்! (புன்சிரிப்பு சிரிக்கிறாள்.)

கோவலன்:—இந்த மறவர்களுடைய குலமே குலம்! எனெனில் சாலினியைப் போன்ற மூதறிவுடைய பெண் உதித்தது மறவர் குலமாதலால்!

கண்ணகி:—சரி; நாதா! கூத்தும் முடிந்தது! சாலினியின் மேல் வந்திருந்த தெய்வமும் மறைந்தது! மறவர்களெல்லோரும் கள்ளுண்டு களித்து இதுவரையில் ஆடிய ஆட்டத்தால் களைத்து அவரவர்கள் உறங்குவதற்குச் செல்லுகிறார்கள்! நாமும் செல்லுவோமே!

கோவலன்:—ஆமாம்! அதோ கௌந்தி யடிகளும் நம்முடைய வரவை எதிர்பார்த்தவர்களாயிருக்கிறார்கள்! சீக்கிரம் செல்லுவோம்!

† முற்காலத்தில் மறவர்கள் அனுசரித்து வந்த தெய்வ வழிபாட்டை அறிந்து கொள்வதில் அநேகருக்கு விருப்ப மிருக்குமெனக் கருதியும், அவர்களுடைய வழக்க ஒழுக்கங்கள் பலருக்கும் ஆச்சரியத்தைக் கொடுக்குமென நினைத்தும் இப்பகுதியை மட்டும் சிலப்பதிகாரத்தில் உள்ளபடியே சிற் சில மாறுபாடுகளுடன் எழுதினேம்.



கண்ணகி:—இங்கு நாம் கண்ட அதிசயத்தைக் கௌந்தி யடிகளுக்குச் சொல்லுவோமா?

கோவலன்:—அஹா! அப்படியே செய்யலாம் (இருவரும் திரும்பிப் போய் கௌந்தி யடிகளைச் சேர்ந்து தாங்கள் கண்ட காட்சியைச் சொல்லிவிட்டு நித்திரை புரியச் சென்றார்கள்)

[3-ம் அங்கம் 4-ம் காட்சி முற்றும்]

நாகை ஸி. கோபாலகிருஷ்ணன்.

---

ஓம் ஸ்ரீ:

ஸ்ரீ சாவித்ரியைநம:

# உபநிஷதர்த்த தீபிகை.

## VI. வஜ்ஜிர சூசிகோபநிஷத்.

ஓம் ஆப்யாயந்து இதிசாந்தி:

1. சித்சதானந்த ரூபராயும், சர்வமனோ விருத்திகளுக்கும் சாக்ஷியானவரும் வேதாந்தத்தால் அறியக்கூடியவராயும் அநந்த ரூபியாயும் இருக்கும் பிரஹ்மத்திற்கு நமஸ்காரம்.

2. அஞ்ஞானத்தைப் பிளப்பதாயும், ஞானமற்றவர்களுக்கு தூஷணமாயும், ஞானக் கண்ணுடையோருக்கு பூஷணமாயும் (அலங்காரமாயும்) இருக்கும் வஜ்ஜிரசூசி யென்கிற சாஸ்திரத்தைச் சொல்கிறேன்.

3. பிரஹ்ம க்ஷத்திரிய வைசிய சூத்திரர் என நான்கு வர்ணங்க ளுண்டு. அவ்வர்ணங்களுக்குள் பிராஹ்மணனே பிரதான மானவனென்று வேதவாக்கியங்களை யனுஸரித்து ஸ்மிருதிகளும் சொல்லும்.

4. அதில் ஓர் வினு ஏற்படும். பிராஹ்மணனென்றால் யார்? ஜீவனு, தேகமா, ஜாதியா, ஞானமா, கர்மமா, அல்லது தர்மத்தையுடையவனு?

5. முதலில் ஜீவன் பிராஹ்மணனென்றால் அது பொருந்தாது. ஏனெனில் போனதும் இனிமேல் வரக்கூடியதுமாகிய அநேக தேகங்களிலும் ஜீவன் ஒருவனே. மேலும் ஒருவனுக்கு கர்மவசத்தால் அநேக தேகங்களுண்டாகும். அப்படிப்பட்ட சகல தேகங்களிலும் ஜீவன் ஒருவனே யாவன். ஆகையால் ஜீவன் பிராஹ்மணனல்ல.

6. ஆனால் தேகம் பிராஹ்மணனோ வென்றால் அதுவுமல்ல. ஏனெனில் சண்டாளன் வரையுள்ள சகல மனுஷ்யர்களுக்கும் தேகமானது பஞ்ச பூதங்களால் ஏற்பட்ட காரணத்தால் ஒரே ரூபமாயிருக்கும். மேலும் (சகல மனுஷ்ய சரீரங்களுக்கும்) மூப்பு, மரணம், தர்மம் அதர்மம் முதலியவை சமமாய்த் தோற்றுகின்றன. மேலும் பிராஹ்மணன் வெளுப்பு வர்ணமென்றும், க்ஷத்திரியன் ரக்த வர்ணமென்றும், வைசியன் பீதவர்ணமென்றும், சூத்திரன் கருப்பு வர்ணமென்றும் நியமம் இல்லை. அல்லாமலும் தகப்பன் முதலியவர்களின் சரீரத்தை தகனம் செய்வதால் பிரஹ்மஹத்தி முதலிய தோஷம் சம்பவிக்கும். ஆகையால் தேகம் பிராஹ்மணனல்ல.

7. ஆனால் ஜாதி பிராஹ்மண னென்னலாமோ வெனில், அதுவுமல்ல. ஏனெனில் ஜாத்யந்தரமாகிய ஜந்துக்களினின்றும் பலஜாதிகளினின்றும் உண்டான மஹரிஷிகள் பலர் உண்டு. ரிஷ்யசிருங்கர் மானினின்றும் பிறந்தவர். கௌசிகர் குசம் என்கிற தர்ப்பையினின்றும் பிறந்தவர். ஜாம்புகர் நரியினின்றும் பிறந்தவர். வால்மீகர் வல்மீகத்தினின்றும் (புத்தினின்றும்) பிறந்தவர். வியாசர் வலையக் கன்னிகையிடம் பிறந்தவர். கௌதமர் முயலினின்றும் பிறந்தவர். வசிஷ்டர் ஊர்வசியினிடம் பிறந்தவர். அகஸ்தியர் கலசத்தினின்றும் பிறந்தவரென்று இவ்விதம் சுருதியில் சொல்லப்படும். இவர்களுள் ஜாதி சம்பந்தம் இல்லாமலே ஞானத்தால் ரிஷிகளானவர்கள் பலர் உண்டு. ஆகவே ஜாதி பிராஹ்மணனல்ல.

8. ஆனால் ஞானம் பிராஹ்மணனோ வென்றால் அதுவுமல்ல. ஏனெனில் க்ஷத்திரியர் முதலியவர்கள் கூட பரமார்த்தர்களாய் ஞானிகளாய் பலர் உளர். ஆகையால் ஞானம் பிராஹ்மணனல்ல.

9. ஆனால் கர்மம் பிராஹ்மணனோ வென்றால் அதுவுமல்ல. ஏனெனில் சகல பிராணிகளுக்கும் பிராரப்தம் சஞ்சிதம் ஆகாம்ய மென்கிற கர்மங்கள் பொதுவாய் காண்கின்றோம். கர்மத்தால் தூண்டப்பட்டவர்களாய் ஜனங்கள் கிரியைகளைச் செய்கின்றார்கள். ஆகையால் கர்மம் பிராஹ்மணனல்ல.

10. ஆனால் தார்மிகன் பிராஹ்மணனோவெனில் அதுவுமல்ல. சுவர்ணதானம் செய்யும் க்ஷத்திரியரனேகருளர். ஆகையால் தார்மிகன் பிராஹ்மணனல்ல.

11. அப்படியாகில் யார்தான் பிராஹ்மணனென்றால், யாதாமொருவன் அத்விதீயமானதும் ஜாதி குணம் கிரியை யற்றதும், ஷடூர்மிகள் [1] ஷட்பாவங்கள் [2] முதலிய சர்வதோஷங்களு மில்லாததும், சத்யஞான அநந்த ஸ்வரூபமானதும், ஸ்வயம் நிர்விகல்பமானதும் சகல கல்பனைகளுக்கும் ஆதாரமானதும், சகல வஸ்துகளுக்கும் அந்தர்யாமியாய் நிற்பதும், உள்ளும் புறம்பும் ஆகாசத்தைப்போல் ஊடுருவி நிற்பதும், அகண்டானந்த ஸ்வபா

(1) ஊர்மி என்றால் தோஷம். அவையாவன:— சோகம், மோகம், மூப்பு, மரணம், பசி, தாகம் என ஆறு.

(2) காம, குரோத, லோப, மோஹ, மத, மாத்சர்யங்கள்.

வத்தை யுடையதும், பிரமாணத்திற் கப்பாற் பட்டதும், அனுபவத்தால் மட்டும் அறியக் கூடியதும், அபரோக்ஷமாய் பிரகாசிப்பதுமான ஆத்மாவை உள்ளங்கை நெல்லிக் கனிபோல் அபரோக்ஷ சாக்ஷாத்காரம் செய்து கிருதார்த்த னனபடியால் காமம் ராகம் முதலிய தோஷங்க ளற்றவனும், சமதமாதி குணங்களுடன் கூடின வனும், பற்று மாத்சர்யம் திருஷ்ணை (விஷயத்தி னிடம் ஆவல்) ஆசை மோஹம் முதலியவைக ளற்றவனும் தம்பம் (கர்வம்) அகங்காரம் முத லியவைகளால் தொடப்படாத மனத்தை யுடை யானும், இருக்கப்பட்டவனே (பிராஹ்மணன்). மேற்கூறிய லக்ஷணத்தோடு கூடியவனே பிரா ஹ்மணனென்பது சுருதி ஸ்மிருதி புராண இதி காசங்களின் அபிப்பிராயம். (அந்த லக்ஷணங் கள்) இல்லாவிட்டால் பிராஹ்மணத்துவம் (ஒரு வனுக்கு) சித்திக்கவே மாட்டாது. ஆத்மாவை சச்சிதானந்த அத்விதீயமாகிய பிரஹ்மமாக பாவிக்கவும்.—என உபநிஷத்.

இங்ஙனம் விவேகசிந்தாமணி
உபநிஷத் வாச்சியார்த்த தீபிகையில்
ஆறுவதான வஜ்ஜிரசூசிகோபநிஷத்
முற்றுப்பெறும்.

மு. கோ. நாராயணஸ்வாமி ஐயர்.

---

## Stray Lessons in Civics.
## துரைத்தன விளக்கம் தனிப்பாடங்கள்.

### 1. Toll. 1. சுங்கம்.



ம் இந்தியாவில் உள்ள குடிகளில் பெரும்பாலோர் படிக்க வைக்கப் படாததால் புத்திக் குறைவுள்ளவர் களா யிருப்பது எல்லோருக்கும் தெரிந்த விஷயமே. ஆனல் படித்தவர்களில் பெரும் பாலோரும் "கண்ணிருந்தாலும் பாரேன், காதிருக் கினும் கேளேன்" என்று ஆராய்ச்சியின் குறைவால் தன்னைச்சுற்றி நடப்பவைகள் அநேகத்திற்குக் கார ணம் கேட்கின் பதில் சொல்ல இயலாமல் விழிக்க நேரிடும். சாதாரணமாய் தென்னை மட்டை எல் லோராலும் ஸதாபார்க்கப் பட்டிருக்கினும், ஓலையின் அமைப்பை வரைந்து காட்டும்படி கேட்கின், பெரும் பாலோர் ஓலைகள் ஓரிடத்திலிருந்து ஜதை ஜதை யாய்ப் போயிருப்பதாய் வரைவார்களே ஒழிய, ஒரு பக்கத்திய ஓலை கிளம்பின இடத்திற்குச் சற்று மேலாக மற்றப் பக்கத்திய ஓலை கிளம்பி யிருப்பதை வரைய மாட்டார்களென்பது திண்ணம். இதற்குக் காரணம் உற்று நோக்கும் அப்பியாச மில்லாத தல்லவா? அதுபோல் நம்மில் அநேகர் அனேகந் தடவைகளில் வண்டி ஏறிச் செல்லும்பொழுது வண்டி சுங்கச் சாவடியிடம் நின்று சாவடியிலிருப்ப வனுக்கு வரி கட்டியான பிறகு ஓட்டிச் செல்லப்படு வதும், விறகு வண்டி, விறகுசுமை முதலியன ஊரில் கொண்டுவரப் படின் அவைகளுக்காக வரி வாங்கப் படுவதும் பார்த்திருக்கலாம். எதற்காக சர்க்காரால் இவ்வரி வாங்கபபடுகிற தென்றும், இவ்வரியினல் ஊராருக்குள்ள லாபா லாபங்கள் என்ன வென்றும் கேட்கப்படின் அவர்களால் திருப்திகரமாண பதிலை அளித்தல் இயலா, முதல் முதல் சுங்கவரி ஏற்படுத்தி யிருப்பது எதக்காக வென்று வசாரித்த பிறகு, அத ஞல் ஊர் ஜனங்களுக்குண்டாகும் நன்மை தீமை களைப் பகருவோம்.

அநேகமாய் ரஸ்தாக்களில் வாங்கும் வண்டி, கால் நடைகள் முதலானவைகளின் சுங்கம், அவைகள் ரஸ் தாக்களின் மேல்போய் ரஸ்தாக்களைக் கெடுத்து விடுவதால் மறுபடி அவைகளைச் சீர்திருத்தி, ஜல்லி மண் முதலியன போட்டு மேடு பள்ள மில்லாமல் வைத்திருக்க வேண்டியதற்காகவே. சில சமயங் களில், ரஸ்தாவை சீராய் வைத்திருக்க வேண்டிய பணத்தைத் தரக்கூடிய சுங்கக் கேட்டுகள் முன் னமே ஏற்பட்டிருக்கினும், நடுவிலுள்ள பாலம் முதலி யன அதிகச் செலவுசெய்து கட்டவேண்டி நேரிடின் புதிதாய் சுங்கக்கேட்டு ஏற்படுத்தப் படுவதும் உண்டு. ஆனல் அவ்வாறு ஏற்பட்டது, போதுமான பணம் சேர்ந்ததும் எடுபட்டுப் போகும்.

சிற்சில விடங்களில் தலைகளிற் கொண்டுவரும் விறகு சுமைக்கு சுங்கம் வாங்குவதுண்டு. இது ஸர்

க்கார் காடுகளினின்று விறகுவெட்டிக்கொண்டு வந்த தற்காகக் கொடுக்கும் வரியாக விருக்கினும் இருக்க லாம், அல்லது முன்னரே ஊரிலிருக்கும் விறகின் விலையை சகாயமாய் வேறு விறகு வருவதால் குறைக் காமலிருக்கும்படி ஏற்படுத்தப் பட்டதாயு மிருக்க லாம். இது விஷயம் மேற்போகப்போக நன்கு விளக்கிக் காட்டப்படும்.

இனி இச்சுங்கத்தினால் ஜனங்களின் லாபா லாபத் தைப்பற்றி விசாரிப்போம்.

ஸர்க்காரால் இச்சுங்க வரி வசூல் செய்யப்படுவதால் ரஸ்தாககள் மேடு பள்ளமில்லாமல் வைக்கப்பட்டு, ரஸ்தாவின் இருபுறங்களிலும் நிழலைத் தரத்தக்க மரங் கள்பயிர்செய்யப் பட்டிருத்தலால் பிரயாணிகள் ஆபத் தில்லாமலும், கதிரவனது உஷ்ணம் பாதிக்காமலும் யாத்திரை செய்ய இயலும். ஆனால் எவ்வாறு ஒவ் வொரு பதார்த்தத்திலும் நற்குணங்களோடு துர்க் குணமும் சேர்ந்திருப்பது ஸஹஜமோ அவ்வாறே இச்சுங்க வரியால் ஊராருக்குக் கொஞ்சம் கெடுதியு முண்டு. அதெவ்வாறெனின், நான்கு ரூபாய் பொறு மான ஒருவண்டி விறகு ஒருவன் கொண்டுவருவ தாய் வைத்துக் கொள்ளுவோம். சுங்க மில்லாவிடில் ஊரார் அவ்விறகை நான்கு ரூபாய்க்கே வாங்கிக் கொள்ளலாகும். ஆனால் அவ்வண்டிக் காரனிடமிரு ந்து நாலு அணா சுங்கம் வாங்கப்படின் அச்சுங்கப் பணம் கொடுப்பதுயார்? விறகு வண்டிக்காரன் அல் லவென்றால் அநேகர் நம்பமாட்டார்கள். ஆனால் வாஸ்தவத்தில் அவ்வண்டிக்காரன் சுங்கத் தீர்வை நாலணாவையும் விறகின் தலையில் வைத்து விற்பதால் சுங்கம் விறகு வாங்குவோர்கள் செலுத்துகிறார்கள் என்பதில் ஆக்ஷேபனை என்ன? இவ்வாறே ரயில்வே கம்பெனியார்கள் அனுப்பப்படும் சாமான்களின் மேல் தீர்வையை அதிகப்படுத்தும் பக்ஷத்தில் அத்தீர்வை யைச் செலுத்துவது வியாபாரிகள் அல்ல, சாமான் கள் வாங்குவோர் என்பது அனேகருக்குத் தெரிந் திரா தென்பது திண்ணம்.

அமெரிக்கா முதலான தேயங்களில், உள்நாட்டு கைத்தொழில் முதலானவைகள் அபிவிருத்தி யாகு நிமித்தம், வெளிநாட்டினின்று வரும் சாமான்களின் மேல் அதிக தீர்வை போடுவதால் வெளிநாட்டார்கள் தங்கள் சாமான்களை போட்டி போட்டு விற்கமுடிய லாமல் அச்சாமான்களின் இறக்குமதி குறைகிறது, ஆகவே ஜனங்களுக்கு சாமான்கள் எவ்வளவுக்கெவ் வள தேவையோ அவ்வளவும் உள்நாட்டிலேயே உண் டாக சேர்வதால் அதிகமாய் கைத்தொழில் விர்த்தி யாவதற்கு ஆக்ஷேபனை என்ன!

எதாவதொரு தேசத்தில் கைத்தொழில்களில் நெசவு தொழில் க்ஷீணித்திருப்பதாய் வைத்துக் கொள்வோம், இதற்குக் காரணம்யாது? இறக்குமதி யாகும் துணிகளின் மீது வரிபோடப் படாததாலும், உள்நாட்டு நெசவுகாரர்கள், தேச இயற்கையினால் யந்திரங்களின் மூலமாய் சவுளிகள் சுளுவில் நெய் யப்பட்டதால் சஹாயமாய் தங்களைவிட நேர்த்தி யான துணிகள் விற்கும் வெளி நாட்டார்களுடன் போட்டி போட இயலாமல் தங்கள் தங்கள் தொழிலை நிறுத்தி ஏழைகளாவதே! ஆனால் தற்கால நிலைமை யைப் பார்த்தால் ஜனங்கள் "நம்தேசத்திய நெசவு காரர்கள் ஏன் சிரமப்படவேண்டும். வெளி தேச த்திய நெசவுகாரர்கள் நமக்காகப் பாடுபட்டு நமக் குத் தான் ஸஹாயமாய் உடைகள் அளிக்கிறார்களே" என்பார்கள் பலர். ஆனால் இவ்வபிப் பிராயம் தேச த்தின் க்ஷேமத்திற்கும், விருத்திக்கும் கூற்றம் என் பதை அவர்கள் கவனிக்கவேண்டியது அத்தியாவ சியம்.

தற்காலத்தில் அதிக பணச்செலவில்லை யென்றும் அரை ரூபாய் செலவழித்து மரக்கால்நாட்டிப்பந்தல் போடுவது வழக்கம்; அக்கால் சீக்கிரம் செல்லரித்து மக்கிப்போவதால் வேறு கால்கள் அடிக்கடி நடப்பட, அக்கால்களின் கிரயம் ஒரு கருங்கல் காலினது கிர யத்தைவிட எவ்வளவோ ஜாஸ்தியாய்ப் போவது தெரிந்த விஷயமல்லவா? எவ்வாறு கொஞ்சம் சிரமப் பட்டாவது பணச்செலவு செய்து கற்றூண்நாட்டின் அது சாசுவதமாயிருப்பதும் தவிர அடிக்கடி காலூன் றும் வேலை இராததல்லவோ! அவ்வாறு தற்காலத்தில் வெளி நாட்டினின்று வரும் துணி முதலியன ஸஹா யமா யிருக்கினும், தேசத்தின் கற்றூண்போன்ற சாசு வதமான நன்மையை நோக்கியே அநேக தேசத்திய ஜனங்கள் வெளிநாட்டினின்று வரும் சாமான்களின் மேல் போடும் தீர்வையை அங்கீகரித்து, உள் நாட்டி னின்றுண்டாகும் மட்டமான துணிகளை அதிக விலை கொடுத்து வாங்கிச் சந்தோஷமாய் உபயோகிக்கின்ற னர். "லோகாஸ்ஸமஸ்தாஸ்ஸுகினோ பவந்து" என்னும் வாக்கியத்திற் கிணங்க ஒவ்வொருவரும்

பொதுநன்மையைக் கோரின், தேசத்தில் யாதொரு குறைவு மிராதென்பதை எல்லோரும் அறிந்து அனுசரிப்பார்களாக. ஓம் தத்ஸத்.

எம். என். கணேசய்யர்.

---

## Madras School-fee Regulations.

## சென்னைப் பள்ளிக்கூடச் சம்பளங்கள்.

சென்னை "எடியுகேஷனல் ரூல்ஸ்" எட்டாவது அதிகாரத்திலுள்ள பள்ளிக்கூடச் சம்பள விதிகளுக்குப் பதிலாக, சென்னை கவர்ன்மெண்டார் அச்சம்பளங்களை யுயர்த்திப் புதிய விதிகளேற்படுத்தி யிருக்கிறார்கள். பள்ளிக்கூடச் சம்பளங்களை யுயர்த்துவது கூடாதென்று சென்னை சட்ட நிரூபண சபையில் கனம் மிஸ்டர். பெர்ராஸு அவர்கள் கொண்டு வந்த தீர்மானம் 18 மெம்பர்களால் மட்டும் அங்கீகரிக்கப்பட்டு 23 மெம்பர்களால் எதிர்க்கப் பட்டதால் அது தள்ளுபடியாய் விட்டது. ஆனால் அப்பொழுது நடந்த தர்க்கத்தில் பள்ளிக்கூடச் சம்பளங்களை யுயர்த்துவது யுக்தமல்லவென்று பல காரணங்கள் எடுத்துக் கூறிப்பேசிய உத்தியோகஸ்தரல்லாத மெம்பர்களுக்கு சமாதான முண்டாக அவர்கள் அன்று சொல்லியதை யெல்லாம் நன்றாக மனதில் வைத்துத் தீர்க்காலோசனை செய்வதாக மேன்மை தங்கிய கவர்னர் அவர்களும் கனம் பொருந்திய மிஸ்டர் ஹாமிக்கு அவர்களும் வாக்களித்தனர். ஆனால் வெளியாயிருக்கிற விளம்பரத்தைப் பார்த்தால் சம்பளங்களை யுயர்த்தும் விஷயத்தில் யாதொரு சகாயமும் செய்யக் காரணமில்லை யென்று கவர்ன் மெண்டாருக்குப் பட்டிருப்பதாகத் தோற்றுகிறது. இது தப்பு என்று எல்லாரும் பொதுவாய் சொல்லுகிறார்கள். சொல்லி யென்ன பயன், கவர்ன்மெண்டார் விதியை வெல்ல ஜனப்பிரதிநிதிகள் மதியாகுமா? ஆகுமென்று தான் பார்த்தார்கள். ஆனால் மூவர் வோட்டுக்குறைவால் பலிக்காமற் போய்விட்டது. பள்ளிக் கூடத்தில் படித்து முன்னுக்குவர ஆசைப் படுகிறவர்கள் பிரதமாரம்பம் முதல் பி. எ. வகுப்பு வரையில் அதிகச் சம்பளம் கொடுத்தே தீரவேண்டும் இப்புதிய சம்பள விகிதங்கள் காலேஜுகளுக்கு 1911-ம் வரு ஜூலை மாதம் முதற்கொண்டும், ஸ்கூல்களுக்கு 1912 இல் ஜூலை மாதம் முதற்கொண்டும் அமுல்ஜிதத்திற்கு வரும். இப்பொழுதுள்ள சம்பளங்களுக்கும் புதிய விதிப்படி கட்டவேண்டிய சம்பளங்களுக்கு முள்ள வித்தியாசம் பின் வரும் அட்டவணையால் விளங்கும்.

| காலேஜ் வகுப்புகள் | தற்கால சம்பளம் | புது விகித சம்பளம் |
|---|---|---|
| பி. எ. | ரூ—84 | ரூ—112 |
| எ.ப். எ ... | ,, 72 | ரூ 88 |
| ஸ்கூல் | | |
| 6-வது-பாரம் | ,, 38 | ரூ 42 |
| 5-வது-பாரம் | 34 | |
| 4-வது-பாரம் | ,, 30 | |
| 3-வது-பாரம் | ,, 22 | ரூ 22 |
| 2-வது-பாரம் | ,, 18 | |
| 1-வது-பாரம் | 15 | |

பள்ளிக்கூட வருஷம் லாங்டர்ம் என்றும் ஷார்ட்டர்ம் என்று இரு பகுதியாகப் பிரிக்கப்படும். கோடைராஜா கழிந்த பின் ஸ்கூல் வருஷம் ஆரம்பிக்கும். ஜூலை முதல் டிசம்பரில் வரும் கிறிஸ்தமஸ் விடுமுறை வரையில் லாங்டர்ம் எனப்படும். இந்த நீண்டப் பகுதியின் சம்பளம் 5 மாதத் தவணைகளில் கொடுக்கப்படும். பிறகு ஜனவரி முதல் கோடைகால விடுமுறை வரையில் "ஷார்ட்டர்ம் என்னும் குறுகிய பகுதியின் சம்பளம் மூன்று மாதத் தவணைகளில் கட்டப்பட வேண்டும்.

—:(o):—

## கமலாம்பாள் சரித்திரம்.

ஒவ்வொருவரும் வைத்து வாசிக்க வேண்டிய அத்புதவார்த்தமான ரசம் பொழியும் கதை. புதிய பதிப்பு வெளியாகவிருக்கிறது. விலை ரூபா 1-4-0 வி. பி. பிரத்தியேகம்.

100-க்குக் குறையாமல் வாங்குகிற வியாபாரிகளுக்கு தக்க கமிஷன் கொடுக்கப்படும்.

வேண்டுவோர் மைலாப்பூர் லலிதாலயத்திலிருக்கும் அ. ப. ஏஜென்ஸி காரியதரிசிக்கு எழுதவும்.

---

## The Mahalaya Fortnight.

### மஹாலய பக்ஷம்.



இப்பொழுது நடக்கும் காலம் மஹாலயபக்ஷம் என்று சொல்லப்படும். புரட்டாசி மாசம் கிருஷ்ணபட்சப் பிரமதை முதல் அமாவாசை வரையில் மஹாலய பக்ஷமாம். இந்தக் காலத்தில் மஹா பூதங்களெல்லாம் வாயுவில் லயப்படுந் தன்மை வாய்ந்ததாயிருக்கும். பிருதிவி அப்புவிலும், அப்பு தேயுவிலும், தேயு வாயுவிலுமாக லயித்து நிற்கும். தேவதைகளுக்கு எல்லாம் லயஸ்தானம் வாயு வாதலால் கரையேறாத பிதிர் தேவதைகளெல்லாம் மஹாலயமுண்டாவதைக் கண்டஞ்சி, அவரவர் சந்ததியாரிடம் வந்து காத்திருப்பார்கள் என்பது கொண்டு,பிராஹ்மணர் ஒவ்வொருவரும் மற்ற, வருணத்தாரும் கூட, அவரவர் பிதிர் திதியில் ஹிரண்மய சிரார்த்தம் செய்து பிதிர்க்களுக்குத் தர்ப்பணம் செய்வார்கள். இது சாமான்யமான ஐதிகபுத்தியோடு செய்கிறவர்களுடைய எண்ணம். இதன் தத்துவார்த்தம் என்னவென்றால், இந்த புரட்டாசி மாசத்தில் சூரியன் கன்யாராசியில் புகுந்து நிற்க, சந்திரன் மீனத்தைவிட்டு மேஷத்திற் பிரவேசிக்கவும், அதன் கலைகள் குறைந்து கொண்டுவந்து கந்நியாராசியில் சூரியனோடு சேரவும் அது லயித்துப்போய் விடுகிறது. கந்நியாராசி காலபுருஷனுக்கு விசுத்தி ஸ்தானமாம். விசுத்தி வாயுசக்ரம் இருக்கும் ஸ்தானம். ஆத்மாவுக் கதிஷ்டானமான சூரியனும் மனதுக்கு அதிஷ்டான தேவதையான சந்திரனும் காலபுருஷனின் விசுத்தி ஸ்தானத்தில் வாயுசக்ரத்தில் வந்து சேரும் பொழுது ஸ்வபாவத்தாலே சந்திரன் சூரியனில் லயமாக (மறைய), தேவதைகளுக் கெல்லாம் அதிபனும் ஸ்ரீ விஷ்ணுவின் அம்சனு மாதலால் "சூரிய நாராயணன்" என்று பேர்பெற்ற ஆத்மாவுக்கு அதிர்ஷ்டானமான தேவதையும் வாயு சக்ரத்தில் அகப்பட்டுக் கொண்டதால், வாயுவின் ஸ்திரத் தன்மையினால் தன் பிரகாசம் மங்கி, வீரியம் குறைந்து, ஒருவித லயத்தை யடைகிறான். இதனால் அந்த அதிர்ஷ்டானதேவதையை ஆச்ரயித்திருக்கும் ஜீவன்களெல்லாம் வீரியங் குன்றி லயதசை யடைந்து நிற்பார்கள். பிதிர்க்கள் லீனமடைந்த ஜீவன்களாதலால் அவர்கள் இந்த லயத் தன்மையை விசேஷமா யுணர்வார்கள். லயயோகம் செய்து பழகியவர்களுக்கு இக்காலத்தில் லயசாமதி இயற்கையில் தானே வரும். ஸ்தூல சூக்ஷ்மகாரணமென்ற மூன்று தேஹமும் தன்னளவாலே ஒன்றிலொன்று காரிய காரணதோரணை யினாலே சுகமாய் லயிக்கும். ஸ்தூல தேஹமான இந்திரியக் கூட்டங்கள் மனதில் லயித்தால் பசி தாஹம், சீதோஷ்ணம் முதலிய தாபங்கள் தீர்ந்துபோம்.

சங்கற்ப விகற்பரூபமான மனசு புத்தியில் லயித்தால் அதன் சங்கல்ப சலனங்கள் குறைந்து சித்த விருத்தி நிரோதனத்துக்கு அநுகூல முண்டாகும். மனசு புத்தியில் லயித்தால், ஆத்ம புத்தியின் பிரகாசத்தினால், இன்ப துன்ப, சுகதுக்காதி துவந்துவங்களெல்லாம் மனதைப் பாதிக்காது விட்டகன்றுபோம். ஆத்ம புத்தியாகிய "மன் மனம்" எங்கே யிருக்கிறதோ, அங்கே வாயுவும் ஸ்திரப்பட்டு நிற்கும்.

"மன்மன மெங்குண்டு வாயுவு மங்குண்டு
மன்மன மெங்கில்லை வாயுவு மங்கில்லை
மன்மனத் துள்ளே மகிழ்ந்திருப் பார்க்கு
மன்மனத் துள்ளே மனோலய மாமே."

என்பது திருமந்திரோபதேசம். காலபுருஷனுடைய கண்ட ஸ்தானமாகிய விசுத்தி

யில் வாயு சக்ரஸ்தான மிருப்பதாலும், அங்கே மன்மனமாகிய சூரியனும், சங்கல்ப மனமான சந்திரனும் ஒன்றிலொன்று லயமாய் நிற்பதாலும், எல்லாவற்றிற்கும் லயஸ்தானமாகிய வாயுசக்ரத்தில் மனோலயமுண்டாக, அப்பொழுது மஹாலய தரிசனம் தானே சித்திக்கும். இந்த மஹாலய தரிசனம் நமக்கு 1906-ம் வருஷத்தில் முதல் முதல் சித்தித்த பொழுது அந்த வருஷம் ஸெப்டெம்பர் மாசத்துச் சஞ்சிகையில் அதனுண்மையை விளக்கிக் காட்டினோம். அதை அப்படியே இங்கு பிரசுரிக்கிறோம். வியாக்கியானம் வேண்டுவோர் 1906-ஸு ஸெப்டெம்பர் மாசத்து விவேகசிந்தாமணியைப் பார்க்கவும்.

"மண்ணிலே பிறந்து தண்ணிலே வளர்ந்து
 எண்ணிலே பிறந்துமனம் புண்ணாகி-மனப்
புண்ணிலே பிறந்து பண்ணிலே வளர்ந்து
 சண்ணிலே மறைந்ததோர் பாம்பாகி-யென்
கண்ணிலே பிறந்துட் கண்ணிலே வளர்ந்து
 விண்ணிலே மறைந்திரு விணைசுடிந்து-தன்
கண்ணினைக் கொடுத்துக் கண்ணதைப் பெற்றவன்
 காலாலுதைத்துக் கண்ணினைப் பற்றவும்-கால்வடி [வாய்
விண்ணிலே யிருந்து மண்ணிலே தோன்றி
 மறைபொருளாலென் கண்ணப்பா நில்லென்ற- [காளத்திநாதனுயர்
குன்றிலே யிருந்துணர் வாயுலிங்கர் தானுகிச்
 சர்ப்பூரதீபத்தைக் காற்றிலு லணையவிட்டு-என்னிலே [தானிருந்
தேகாந்தமாய் விளங்கும் வேதாந்த உண்மைதனை
 நாதாந்தத் தேயிருந்து சித்தாந்த மாயுணரச்-சித்த [முணர்
வேதாந்த நாதாந்த சித்தாந்த மூன்றுமே தான்
 சத்துச்சித்தாநந்த சொரூபமதாய் நின்றதுகாண்."

(இதற்கு வியாக்கியானம் 1906-ம் ஸு ஸெப்டெம்பர் மாசத்து விவேகசிந்தாமணியில் விஸ்தாரமாய் செய்யப்பட்டிருக்கிறது.)

---

விவேகசிந்தாமணி.—இது ஸ்ரீமத். சி. வி. சுவாமிநாதைய ரவர்களால் மாச மொருமுறை நல்ல செந்தமிழ் நடையிலெழுதி அச்சிடப்பட்டு வரும் ஓர் சிறந்த பத்திரிகை. இதில் போகம், பக்தி, ஞானம் முதலிய சாதனமுறைகளும், நீதி போதம், வேதாந்த சாத்திரம், சுதேச விதேச சரித்திரங்கள், மகாத்மாக்களின் அமிர்த வசனங்கள் ஆகிய இவைகளும், வேறு பல மிகப்பிரயோசனமான விஷயங்களு மடங்கியிருக்கிறன. இதனை வாசிப்போர் பலவித அறிவிலும் வளர்ந்து வருவார்களென்பது நாம் சொல்ல வேண்டியதில்லை. ஸ்ரீமத். சுவாமிநாதையரவர்கள் தமிழ் ஆங்கில மென்னு மிருபாஷைகளிலும் அதிநிபுணர். நமது சமய சாஸ்திரங்களை இவர்போற் கற்றிருப்பவர்கள் மிகச் சிலரேயாவர். இவரது திறமை இப்பத்திரிகையில் இவர் எழுதிவரும் விஷயங்களால் மாத்திரமன்று இவர் ஆங்கிலத்தில் பல பத்திரிகைகளுக்கும் எழுதிவரும் விஷயங்களாலும் நன்கு விளங்கக் கிடக்கின்றது. யாழ்ப்பாணம் கத்தோலிக்க பாதுகாவலன் பத்திரிகையில் மெஸ் வெல்ப்ஸ் அவர்களின் உபநியாசங்களுக்கு விரோதமாய் நிகழ்த்தப்பட்ட ஆக்ஷேபங்களை நிராகரித்து நமதுஇந்துசாதன இங்கிலிஷ் பத்திரிகையில் எழுதி வருபவரிவரே. இவரெழுதிவரும் இவ்வரியவிவேகசிந்தாமணிப்பத்திரிகையைக் கண்ணுறும் அறிவுடையோர் அதற்குச் சந்தாநேயராகி அதனைப்பெற்று வாசியாது விடமாட்டார். அப்பத்திரிகையை நமக்கு ஒழுங்காயனுப்பி வரும் ஐயரவர்கட்கு நாம் நமது மனமுவந்த ஸ்துதி கூறுகின்றோம்.

—யாழ்ப்பாணம் இந்து சாதனம்.

—(*)—

## மண்டல பிராஹ்மணோபநிஷத்தில்

### நேர்ந்த அச்சுப்பிழைத் திருத்தங்கள்.

---

ஏப்ரல்-மே விவேகசிந்தாமணியில்

| | |
|---|---|
| பக்கம் 47-வரி கீழிருந்து 3-வது. | "பலத்தில்" என்பதற்குமுன் "கர்மத்தின்" என்று சேர்க்கவும். |
| " 48-வரி-3. | "இந்திரியங்களின் பொருளாகிய விஷயங்களினின்றும் மனதைத் தடுத்தல் பிரத்தியாகாரமாம்" எனத் திருத்துக. |
| " 48-கீழிருந்து 9-வது வரி. | "நிவிருத்தியா." என்பதில் யாவை எடுத்து விடுக. |
| " 48- " 8 " | "நாதின்" என்பதற்கு "நாதுகளின்" என வைக்கவும். |

| | | |
|---|---|---|
| " | 48-கீழிருந்து 1-வரி - | "ஜ்யோதிக் கூட்டங்கள்" என்பதை "ஜ்யோதிக்கிரணங்கள்" என்று மாற்றவும். |
| " | 49-வரி-3-வது வரி- | "சந்திர" என்பதிற்கு பதிலாக "சந்திரர்களைப்போலும்" என்று எழுதவும். |
| " | 49-கீழிருந்து 3-வது வரி- | "சிரசுக்கள்" என்பதை "சிரசுக்குள்" என்று மாற்றவும். |
| " | 50-கீழிருந்து 3-வது வரி- | "சதா" என்பதை "சுதா" என்று திருத்தவும். |
| " | 50 மூன்றாவது குறிப்பில்- | "புத்தி" என்பதற்கு முன் "மஹத் அல்லது" சேர்க்கவும். 'ஆத்தமா' என்பதை 'ஆத்மா' எனத் திருத்தவும். |
| " | 51-வரி-6. | "அப்பியாசத்தால்" என்பதன் பிறகு "தாலு மூலத்தில்" என்று சேர்க்கவும். |
| " | 51-வரி-7. | "ஜ்யோதி" என்பதற்கு பின்வரும் குறிப்பைச் சேர்க்கவும்:— "தாலு மூலத்திலிருந்து பனிரெண்டங் குலங்களின் முடிவில் இருள் தோற்றமுண்டா மென்றும், அவ்விருளின் நடுவில் பார்வையை நிறுத்த அகண்ட மண்டல ஜ்யோதி பிரகாசிக்குமென்றும், அதனால் மனம் ஸ்திரமாகி அதன் வழியாய் வாயுவும் ஸ்திரமாகுமென்றும், ஹடயோகத்தை நூறுவருஷகால மப்பியாசம்செய்தாலும் ராஜ யோகத்தாலாவது போல் மனம் வாயு இவை இரண்டின் ஸ்திரத்தன்மை ஏற்படாதென்று உரையாசிரியர் கூறுகிறார்." |
| பக்கம் | 51-வரி-22 - | "பார்வை" என்பதை "பாவனை" யென்று திருத்தவும். |
| ,, | 51. முதல் குறிப்பு. - | "பிரதிபத் என்று பிரதமைதிதிக்குப்பேர்" என்று திருத்தவும். |
| ,, | 52 முதல் குறிப்பு—வரி 2. | "பொருளும்" என்பதை "பொருளுமற்று" என்று மாற்றவும். |
| ,, | 52 3-வது குறிப்பு-வரி 2. | "அற்ற சுத்த" என்பதை "என்கிற ஹம்ஸ" என்று திருத்தவும் |
| ,, | 53 கீழிருந்து வரி 7, 6. | "ஞாபக, ஞாப்தி" என்பதை "ஞாபகம், ஞப்தி" என்று திருத்தவும். |
| ,, | 54 வரி 9. | "பிரஹ்மமாகிவிட்ட" என்பதை 'பிரஹ்மமாகிய' என்று திருத்தவும். |
| ,, | 54 வரி 12. | "பிந்துவை" என்பதற்கு பின்வரும் குறிப்பைச் சேர்க்கவும்:— "பிந்து என்பதின் பொருள் விவேகசிந்தாமணி இந்த தொகுதியில் 14-வது பக்கத்தைப்பார்க்க விளங்கும்." |
| ;, | 54 வரி 13. | "அஜாட்ய" என்பதற்கு பிறகு "சஹஜ" என்று சேர்க்கவும். |
| ,, | 54 கீழிருந்து வரி 7. | "பிரகாசமாயும்" என்பதை "பாராகாசமாயும்" எனத்திருத்தவும். |
| " | 55 வரி 3. | "கழிந்தவனாகி," என்பதற்குப்பிறகு "எப்பொழுதும்" என்றுசேர்க்க. |
| ,, | 56 வரி 8. | "யடையப்" என்பதை "யடைவதால்" என்று திருத்தவும். |
| ,, | 56 வரி 12. | "துவனியெனப்பெயர்:" என்பதை "துவனியெதோ," என்று திருத்தவும். |
| ,, | 56 முதல் குறிப்பு வரி 1. | * "சக்ர" என்பதை "சக்ரம்" என்று திருத்தவும். |
| ,, | 56 முதல் குறிப்பு வரி 1. | * "த்ரலக்ஷியம்" என்பதை "த்ரிலக்ஷியம்" எனத்திருத்தவும். |
| ,, | 56 இரண்டாவது குறிப்பு. | "வஸ்துவாகிய" என்பதை எடுத்து விடவும். |
| " | 56 3வது குறிப்பு. | "த்வநி"யென்பதை "த்வநி:" என்றுவிஸர்க்கம் சேர்த்துதிருத்தவும். |

---

* இப்பொழுது அச்சிடும் ஆபீஸில் கிரந்த எழுத்துக்கள் இல்லாமையால் தமிழ் எழுத்துக்களையே உபயோகிக்க லாயிற்று.